கன்னன்பெயர்—கதிர்மதலை - கவசகுண்டலன் - கச்சைக்கொடியினன் - காநீநன் - அங்கர்கோமான். ஆ ரு. ] வீமன்பெயர்—மடங்கலின்கொடியோன் - மாருதி - வாயுமைந்தன் - இடும்பிகொழுநன் - கதாயுதன். ஆ ரு.

அருச்சுநன்பெயர்—கிருட்டிணன் - பற்குநன் - தநஞ்சயன் - காண்டீவன் - சவ்வியசாசி - வீபற்சு - விசயன் - பார்த்தன் - கேசவற்குத்தோழன் - சுவேதவாகநன் - கிரீடி. ஆ ௰௩.

சேரன்பேர்—வில்லவன் - கொங்கன் - வஞ்சிவேந்தன் - போந்தின்றாரோன் - கொல்லிவெற்பன் - குடக்கோ - குட்டுவன் - குடகன் - கோதை - உதியன் - வானவரம்பன் - மலையமான் - பொருநையாற்றுறைவன் - சேரலன். ஆ ௰௪.

கோச்சோழன்பெயர்—நேரியன் - சென்னி - பொன்னித்துறைவன் - நேரிவெற்பன் - ஆரின்றாரலையன் - கிள்ளி - அபயன் - கோழிவேந்தன் - வளவன் - செம்பியன் - புலியுயர்த்தோன் - சூரியன் - புனனாடன் - மால். ஆ ௰௪.

பாண்டியன்பேர் — செழியன் - கூடற்கோமான் - தென்னவன் - வேம்பின்றாரோன் - வழுதி - குமரிச்சேர்ப்பன் - வைவையந்துறைவன் - மாறன் - பொதியவெற்பன் - மீநவன் - கைதவன் - பஞ்சவன் - கௌரியன். ஆ ௰௩.

குறுநிலமன்னர்பெயர்—குறும்பர் - ஆட்டர் - வேளிர் - புரோசர். ஆ ௪. ] அமைச்சர்பெயர்—தேர்ச்சித்துணைவர் - எண்ணர் - நூலோர் - சூழ்வோர் - உழையர் - மந்திரர் - முதுவர் - முன்னோர் - அமாத்தியர். ஆ ௯.

படைத்தலைவன்பேர்—பொருநன் - சேநாபதி. ஆ ௨. ] நிமித்திகன்பேர்—சாக்கை - வள்ளுவன். ஆ ௨. ] கணக்கர்வழியினுள்ளார்பெயர்—காவிதியர்.] (க) பரிவாரப்பேர்—பரியாளம். (க)

மிக்கசெம்பியனேகாரிவிராடனே நிருதிதானுந்
தக்கதுந்துமாரிதானுஞ்சகரனுநளனுந்தாமுன்
னக்குரான்சந்திமாநோடந்திமாந்சிசுபாலன்னே
வக்கிரான்கன்னன்சந்தனிடைவள்ளல்வகுத்தவாறே. (உஉ)

பாரியாயெழிலிநள்ளிபகுந்தொடைமலையன்பேக.
ஞேரியேகடையிலுற்றோருறுபொருடண்டாதீந்தும்
வாரியிலிருந்தோர்க்கிட்டும்வளர்புகழ்துதிக்கவீந்தும்
பேரியல்வையமெண்ணப்பெற்றனர்முப்பாலாகும். (உ௩)

இளங்கோக்கண்மன்னர்பின்னரிப்பரொட்டியர்காராளர்
வளம்பெறவாழ்வேளாளர்வைசியர்தம்பொதுப்பேராருங்
இளந்தகோக்காத்தன்மற்றுங்கிளர்பொருளீட்டலேனா
விளங்கவேயுழலான்மூன்றுகுலம்பெறும்வேறுசொல்வாம். (உச)

வந்தகோவலருடன்கோவர்த்தநரிப்பர்முப்பேர்
முந்துகோவைசியரொன்றுமொழிந்திடும்வணிகர்நாய்கர்
தந்தநூற்பரதர்முப்பேர்தநவைசியர்க்கேசாற்று
முந்துபூவைசியர்முப்பெருழவர்மேழியர்வேளாளர். (உரு)

இந்தமுக்குலத்துளார்க்கேயேவல்பூண்டொழுகுகின்ற
வெந்திறலாளர்தாமேவிதித்தசூத்திரரொன்றுந்
தந்தநூலுணைத்தவாறேசாற்றின்மிவர்கடாமே
யுந்தியதொழிலுக்கெல்லாமுரியவர்தெரியுங்காலே. (உகூ)

வெம்பியபிடகராயுள்வேதியர்மருத்துவர்க்கா
மம்புவிமற்றுமாமாத்திரரொன்றுமவர்க்கேகூறுங்
கும்பகாரன்குலாலன்குறித்தவேட்கோவன்சக்கிரி
நம்புமட்பகைவனைந்துநாட்டியகுயவனுமம். (உஎ)

சிற்பரோவியரோமோகர்சித்திரகாரர்நாமஞ்
சிற்பியர்துவட்டாவோர்வர்தபதியர்சிறப்பின்மிக்க
வற்புதர்பவநர்கொல்லரக்கசாலையர்புனைந்தோர்
கற்பில்கம்மியரோகண்ணுளர்வினைஞர்கண்ணாளர்நாமம் (உஅ)

வரைவின்றி யாவர்க்குங்கொடுக்கு முதல்வள்ளலெழுவரும் இரப்போர்க்குக்கொடுக்கு மிடைவள்ளலெழுவரும் - புகழ்வோர்க்குக் கொடுக்குங்கடைவள்ளலெழுவருமாவார்பெயர்—செம்பியன் - காரி - விராடன் - நிருதி - துந்துமாரி - சகரன் - நளன். சூ எ. ] அக்குரன் - சந்திமான் - அந்திமான் - சிசுபாலன் - வக்கிரன் - கன்னன் - சந்தன் சூ எ.

பாரி - ஆய் - எழினி - நள்ளி - மலயன் - பேகன் - ஓரி. சூ எ.

வைசியர்பொதுப்பெயர்— இளங்கோக்கள் - மன்னர்பின்னர் - இப்பர் - எட்டியர் - காராளர் - வேளாளர். சூ ௯.
பசுக்காத்தலானும் - பொருளீட்டலானும் - ஏருழுதலானும் - மூன்றுகுலமாகியவைசியர்க்குமுறையேபெயர்சொல்லுமாறு.

கோவைசியர்பெயர்—கோவலர் - கோவர்த்தநர் - இப்பர். சூ ௰.
தநவைசியர்பெயர்—வணிகர் - நாய்கர் - பரதர். சூ ௰.
பூவைசியர்பெயர்— உழவர் - மேழியர் - வேளாளர். சூ ௰.

இம்முக்குலத்துளார்க்கேவல்செய்வோர்பெயர்—சூத்திரர் - தொழிற்குரியவர். சூ உ.

மருத்துவர்பெயர்—பிடகர் - ஆயுள்வேதியர் - மாமாத்திரர் சூ ௩.
குயவன்பெயர்—கும்பகாரன் - குலாலன் - வேட்கோவன் - சக்கிரி - மட்பகைவன். சூ ரு.

சித்திராகாரர்பெயர்—சிற்பர் - ஓவியர் - மோகர். சூ க. ] கம்மாளர்பெயர்—சிற்பியர் - துவட்டா - ஓவர் - தபதியர் - அற்புதர் - யவநர் - கொல்லர் - அக்கசாலையர் - புனைநேர்தோர் - கம்மியர் - கண்ணுள்வினைஞர் சூ ௰௧.

கருமரோமருவர்கொல்லர்காட்டியநாமமாகு
மரவினையாளன்மற்றைமயனொடுதபதிதச்சன்
புரியும்பொன்செய்யுங்கொல்லர்பொன்வினைமாக்கடட்டா
ருணாகெழுசொன்னகாரரக்கசாலையருமோதும். (௨௯)

தருமுறைதெரிந்தசிற்பாசாரியர்மண்ணீட்டாளர்
பொருளினையுருக்குந்தட்டார்பொன்செய்யும்புலவரென்ப
பெருகியபணித்தட்டார்தம்பேர்கலந்தருநர்தாமே
வருமுறைமுத்தங்கோப்பார்மணிகுயிற்றுநரென்றுமே. (௩௰)

கலத்தைச்செய்கஞ்சகாரர்கன்னுவர்கன்னாகு
மிலைச்சரோயாரியர்க்காமிலேச்சரும்விதித்தபேரொ
துலைப்படும்யவநரென்பசோநகருவச்சரும்பேர்
மலைப்பிலாவுமணருப்புவாணிகர்காணுங்காலே. (௩௧)

இருந்தகாழியரோதுசாரீங்கோலியரோவண்ணார்
வரும்பெருமஞ்சிகன்சீமங்கலிமாசுதீர்த்துத்
திருந்துமேனுதிமன்றுஞ்சிறந்தநாவிதன்பேராகும்
பொருந்தரோவேதகாரர்போற்றுங்காருகர்நெய்வார்பேர். (௩௨)

பொல்லரோதுன்னரென்பபுகன்றதோற்றுன்னர்செம்மா
ருல்லியர்கூவநூலோரொளிவளைபோழ்நர்தாமே
மெல்லியசங்கறுப்போர்சூநருன்விற்போரென்ப
சொல்லியபறம்பர்தாமேதோல்வினைமாக்களுமம். (௩௩)

கொலைஞரோகளைஞர்வங்கர்குணுங்கர்மாதங்கரோடு
புலைஞரோயிழிஞரேழ்பேர்பொருந்துசண்டாளர்நாம
முலவுசென்னியரோபண்டரோவர்வந்தித்துநிற்போர்
பலர்புகழ்மதங்கர்சூதர்பண்ணவர்பாணராமே. (௩௪)

சக்கிரிநந்திசெக்கான்றன்பெயராகுமென்ப
தொக்ககள்விற்போர்நாமஞ்சௌண்டிகர்துவசரோடு
தக்கதோர்பிழியர்மற்றம்வெருஞ்சாற்றுபன்றே
மிக்கயீகாமனுமயீகான்மாலுயிர்காணும். (௩௫)

கருமர்பெயர்—மநுவர் - கொல்லர். ஆக ௨.] தச்சன்பெயர்—மரவினையாளன் - மயன் - தபதி. ஆக ௩.] தட்டார்பெயர்—பொன்செய்யுங்கொல்லர் - பொன்வினைமாக்கள் - சொன்னகாரர் - அக்கசாலையர். ஆக ௪.

சிற்பாசாரியர்பெயர்—மண்ணீட்டாளர். (௧)
பொருளினையுருக்குந்தட்டார்பெயர்—பொன்செய்யும்புலவர். (௧)
பணித்தட்டார்பேர்—கலந்தருநர். (௧)
முத்தங்கோப்பார்பெயர்—மணிகுயிற்றுநர். (௧)

கன்னார்பெயர்—கஞ்சகாரர் - கன்னுவர். ஆக ௨.
ஆரியர்பேர்—மிலைச்சர் - மிலேச்சர். ஆக ௨.
சோநகர்பேர்—யவநர் - உவச்சர். ஆக ௨.
உப்புவாணிகர்பெயர்—உமணர். (௧)

வண்ணார்பெயர்—காழியர் - தூசர் - ஈரங்கோலியர். ஆக ௩.
நாவிதன்பேர்—பெருமஞ்சிகன் - சீமங்கலி - எனாதி. ஆக ௩.
வேதகாரர்பெயர்—பொருந்தர். (௧)
நெய்வார்பேர்—காருகர். (௧)

துன்னர்பெயர்—பொல்லர். (௧)] தோற்றுன்னர்பெயர்—செம்மார் (௧)] கூவநூலோர்பெயர்—உல்லியர் (௧)] சங்கூதுப்போர்பெயர்—வளைபோழ்நர் (௧)] ஊன்விற்போர்பெயர்—சூநர் (௧)
தோல்வினைமாக்கள்பெயர்—பறம்பர். (௧)

சண்டாளர்பெயர்—கொலைஞர் - களைஞர் - வங்கர் - குணுங்கர் - மாதங்கர் - புலைஞர் - இழிஞர். ஆக ௭.] பாணர்பெயர்—சென்னியர் - பண்டர் - ஓவர் - வந்தித்துதிற்போர் - மதங்கர் - சூதர் - பண்ணவர். ஆக ௭.

செக்கான்பெயர்—சக்கிரி - நந்தி. ஆக ௨.] கள்விற்போர்பெயர்—சௌண்டிகர் - துவசர் - பிழியர் - படுவர். ஆக ௪.] மீகாமன்பெயர்—மீகான் - மாலுமி - நீகான். ஆக ௩.

மாவலர்வதுவரோடுவாதுவர்பண்ணுவார்பேர்
சோர்விலாப்பாகரோடாதோரணர்யானைப்பாகர்
காவலர்மெய்காப்பாளர்கஞ்சுகியென்றுங்காட்டு
மெவுகாரோடவொன்பவுறைகாரர்விதித்தபேரே. (௩௬)

தூயதேர்ப்பாகன்சூதன்வலவன்சாரதியுஞ்சொல்லும்
வேயர்சாரணரேயொற்றர்விதித்தபேர்மடையர்நாம
மேயவாலுவரேமிக்ககூவியரென்றுநூலை
யாயும்பாநசிகரென்றும்பாசகரென்றுமாமே. (௩௭)

நாடகர்கண்ணுளாளர்நடர்வயிரியர்நிருத்தர்
கோடியர்பொருநர்கூத்தரவிநயரென்றுங்கூறு
நீடியவாயிலோரோநெடுந்தமிழ்க்கூத்தரென்ப
ராடும்வேழம்பரென்பகழாயருக்கடைத்தநாமம். (௩௮)

குயிலுவர்நரம்பினையகருவியைக்கொளுத்துமாக்க
ளியலுந்தோற்கருவியாளரியவர்ந்வெதியாட்டாளன்
சயமுறுதேவராளன்சாலிநிதேவராட்டி
யயலவர்நொதுமலாளர்வம்பலரென்றுமாமே. (௩௯)

புதியவர்விருந்தோரென்பவதிதிவம்பலரும்போற்றும்
பதிகனேவழிச்செல்வோனும்வியவனேயேவுவான்பேர்
முதுவர்மூதுணர்ந்தோர்நர்மங்கிழவரேயுரியோர்பேரா
மதிகமாங்குறிக்கொள்வோர்பாராயணரென்பதாமே. (சய)

வித்தகர்வினையுளாப்போர்விதியுளிவழியுளாப்போ
ருத்தமமானபண்புற்றுளாப்பவர்தூதராகுந்
தொத்தொடுகிணகர்தாசர்தொழும்பொடுதொறுவிருத்தி
யத்தகுதொண்டுசேடராளிவையடிமையாமே. (சக)

சிலதனேநண்பன்யாங்கன்சேடனேதுணைவன்றோழ
னெலுவனுமாமிவன்முன்னிலைப்பெயரோடாரென்ப
சிலதியேசகியேபாங்கிசேடியேயிகுளைதோழி
நலமுறுமுன்னிலைப்பேர்நாடின்மற்றேடியெல்லா. (சஉ)

பண்ணுவார்பேர்—மாவலர் - வதுவர் - வாதுவர். ஆக ௩. யானைப்பாகர்பெயர்—பாகர் - ஆதோரணர் ஆக உ.] மெய்காப்பாளர்பெயர்—காவலர்- கஞ்சுகி. ஆக உ.] உறைகாரர்பேர்—காரோடர். (௧)

தேர்ப்பாகன்பெயர்—சூதன் - வலவன் - சாரதி. ஆக ௩. ] ஒற்றர்பேர்—வேயர் - சார்ணர். ஆக உ. ] மடையர்பெயர்—வாலுவர் - கூவியர் - பாநசிகர் - பாசகர். ஆக ச.

கூத்தர்பெயர்—நாடகர் - கண்ணுளாளர் - நடர் - வயிரியர் - நிருத்தர் - கோடியர் - பொருநர் - அவிநயர். ஆக அ. ] தமிழ்க்கூத்தர்பெயர்—வாயிலோர். (௧) கழாயர்பெயர்—வேழம்பர். (௧)

நரம்பிஞயகருவியைக்கொளுத்துமர்க்கள்பெயர்—குயிலுவர் (௧) தோற்கருவியாளர்பெயர்—இயவர். (௧) ] வெறியாட்டாளன்பெயர்—தேவராளன். (௧) ] தேவராட்டியின்பெயர்—சாலிநி. (௧) அயலவர்பெயர்—நொதுமலாளர் - வம்பலர். ஆக உ.

புதியவர்பெயர்—விருந்தோர் - அதிதி - வம்பலர் ஆக ௩. ] வழிச்செல்வோன்பெயர்—பதிகன் (௧) ஏவுவான்பேர் - வியவன் (௧) மூதுணர்ந்தோர்பெயர்—முதுவர் (௧) உரியோர்பேர்—கிழவர் (௧) குறிக்கொள்வோர்பெயர்—பாராயணர். (௧)

தூதர்பெயர்—வித்தகர் - வினையுரைப்போர் - வழியுரைப்போர் - பண்புரைப்பவர். ஆக ச.] அடிமையின்பெயர்—தொத்து - கிணகர் - தாசர் - தொழும்பு - தொறு - விருத்தி - தொண்டு - சேடர் - ஆள் ஆக கூ.

தோழன்பெயர்—சிலதன் - நண்பன் - பாங்கன் - சேடன் - துணைவன் - ஏஓவன். ஆக சா. ] தோழன்முன்னிலைப்பெயர்—எடா (௧) தோழிபெயர்—சிலதி - சகி - பாங்கி - சேடி - இகுளை ஆக ரு.] தோழிமுன்னிலைப்பேர்—ஏடி - ஏல்லா ஆக உ.

அந்தகன்சிதடனென்பகுருடனுங்கோணல்கூன்பேர்
சிந்துவாமநமேகுஞ்சங்குறள்வதிர்செவிடென்றுகு
முந்தியமுடமேம்பங்குகுணியூமைமூகைமூங்கை
தந்தபெண்டகனேபேடிநபுஞ்சகனலியேசண்டன். (௪௩)

காதகன்சாருகன்றன்கடுங்கொலையாளிநாமம்.
வேதனைசெய்வோன்பேரேயருந்துதன்விளம்பலாகும்
பீதனேசகிதனோடுபீருவுமச்சமுள்ளோ
னேதியசவநன்வேகியுற்றவஞ்சகனிசாதன். (௪௪)

படிறரேபரத்தர்தூர்த்தர்பகரிடங்கழியராகும்
விடரும்பல்லவருமப்பேர்மிக்கநாகரிகனென்ப
கூடிநகர்ப்பதிவாழ்கின்றசதுரர்காமுகனென்றும்பே
ரடைவுளகிராமமுற்றோன்கிராமியனாகுமென்ப. (௪௫)

வலவைவல்லுநனேவல்லோன்மாட்டார்பேர்வல்லாரென்ப.
குலமுளோன்குலீநனாகுங்கரியவன்குறித்தகள்வ
னுலவுநோயுற்றெழுந்தோனுல்லாயன்பதாதிகாலா
ளலைவில்சந்நத்தனென்பதாயத்தமானோன்பேரே. (௪௬)

மந்தனேகூர்மையில்லோனக்கனிர்வாணிநாமம்
வெந்திறலியவுளென்பமிகுபுகழாளன்பேரே
யுந்தியவருளோனேகாருண்ணியனென்றுகூறும்
வந்திகள்கவிகள்கற்றோர்வண்டரேகடிகைமாக்கள். (௪௭)

பூவலனீகையாளன்போற்றும்வேளாளன்றியாகி
யுணாகெழுவேள்வியாளனுபகாரிகொடையுளோனும்
வணாவறக்கொடுத்தளிப்போன்வள்ளியோனென்றுகூறு
மிரவலன்பரிசிலாளன்யாசகன்றீநனேற்போன் (௪௮)

கரவடர்சோரர்தேநர்பட்டிகர்புரையோர்கள்வர்
திருடர்பேரிருமூன்றுந்தெரித்திரனகிஞ்சன்பேதை
மருவுநல்கூர்ந்தோனில்லோன்வறியனாதுலனேயேழை
விரவியவுறுகணாளனிலம்பாட்டோன்மிடியனாமம். (௪௯)

குருடன்பெயர்—அந்தகன்-சிதடன். ஆ உ. ] கூனின்பேர்—கோணல் (க) குறளின்பெயர்—சிந்து - வாமநம் - குஞ்சம். ஆ ௩.] செவிட்டின்பெயர்—வதிர். (க) ] முடத்தின்பெயர்—பங்கு - குணி. ஆ உ.] ஊமையின்பெயர்—மூகை-மூங்கை- ஆ உ. ] பெண்டகன்பெயர்—பேடி - நபுஞ்சகன் - அலி - சண்டன். ஆ ச.

கொலையாளியின்பெயர்—காதகன் - சாருகன். ஆ உ ]வேதனை செய்வோன்பேர்—அருந்துதன். (க) ] அச்சமுள்ளோன்பெயர்—பீதன் - சகிதன் - பீரு. ஆ ௩. ] வேகியின்பெயர்—சவநன். (க) ] வஞ்சகன்பெயர்—நிசாதன். (க)

இடங்கழியர்பெயர்—படிறர்-பரத்தர் - தூர்த்தர் - விடர் - பல்லவர். ஆ ரு. ] நாகரிகர்பேர்—சதுரர் - காமுகர். ஆ உ. ] கிராமமுற்றோன்பெயர்—கிராமியன். (க)

வல்லோன்பெயர்—வலவை - வல்லுநன். ஆ உ.] மாட்டார்பேர்—வல்லார். (க) ] குலமுளோன்பெயர்—குலீநன். (க) ] கள்ளன்பெயர்—கள்வன். (க) ] நோயுற்றெழுந்தோன்பெயர்—உல்லாயன். (க) ] காலாளின்பெயர்—பதாதி. (க) ] ஆயத்தமானோன்பேர்—சந்நத்தன். (க)

மந்தன்பெயர்—கூர்மையில்லோன். (க) நிர்வாணியின்பெயர்—நக்கன். (க) ] மிகுபுகழாளன்பேர்—இயவுள் (க) ] அருளோன்பெயர்—காருண்ணியன். (க) ] கடிகைமாக்கள்பெயர்—வந்திகள் - கவிகள் - கற்றோர் - வண்டர். ஆ ச.

கொடையுளோன்பெயர்—புரவலன் - ஈகையாளன் - வேளாளன் - தியாகி - வேள்வியாளன் - உபகாரி. ஆ சு. ] வரைவறக்கொடுத்தளிப்போன்பெயர்—வள்ளியோன். (க) ] ஏற்போன்பெயர்—இரவலன் - பரிசிலாளன் - யாசகன்- தீநன். ஆ ச.

திருடர்பேர்—கரவடர் - சோரர் - தேநர் - பட்டிகர் - புரையோர் - கள்வர். ஆ சு. ] மிடியன்பெயர்—தெரித்திரன் - அகிஞ்சன் - பேதை - நல்கூர்ந்தோன் - இல்லோன் - வறியன் - ஆதுலன் - ஏழை - உற்றுகணாளன் - இலம்பாட்டோன். ஆ ய.

வயவனேதிறலோன்மற்றைவண்டனேமிண்டன்மள்ளன்
வியவனேவிறலோன்மீளிவீரனேதிண்ணியன்பேர்
நயமில்கூளியரோருளர்நாட்டும்வாளுழவர்மள்ளர்
சயமிகுமறவர்தானைத்தலைவராம்படருமாமே. (௫௰)

அரிகளேசெறுநர்சேராரமராருள்ளாரோநள்ளார்
மருவலர்தெவ்வர்மாணார்மாற்றலர்மன்னாரொன்னார்
தரியலரொட்டார்வட்கார்சார்பிலார்பற்றார்செற்றார்.
பரவொடுகேளாரொல்லார்பகைவர்பேரொழுமூன்றுமே. (௫௧)

ஒல்லுநர்தொடர்ந்தார்சேர்ந்தாரொட்டுநர்பெட்டார்வேட்டார்
புல்லுநர்பசைந்தார்மித்திரர்புரிந்தாரார்வலர்விழைந்தார்
நல்லவர்காதலித்தார்நள்ளுநர்நயந்தார்கூட்ட
மெல்லவொன்றுநர்மூவாறுமேழுவினர்நாமமாமே. (௫௨)

உற்றவரிகுளைநட்டோருறவொக்கல்கிளையேசார்ந்தோர்
பற்றினர்சிறந்தோர்நட்புப்பந்தமேபரிசநங்கேள்
குற்றமினண்புகூளிகுடும்பமேகடும்புநள்ளி
சுற்றமூவாறுபேருஞ்சூழ்ந்தபாசநமுஞ்சொல்லும். (௫௩)

பொறியிலார்கயவர்நீசர்புள்ளுவர்புல்லர்தீயோர்
சிறியசிந்தையர்கநிட்டர்தீக்குணர்தீம்பர்தேரார்
முறையிலார்முசுண்டர்மூர்க்கர்முசுடர்பல்லவரோங்கையர்
மறைவிலாக்கலர்மூவாறுமன்னுபூரியருங்கீழோர். (௫௪)

முழுமகன்சிதடன்பேதைமூடனேமண்ணையஞ்ஞை
பிழைதையேமடனேயாதனேழையேயறிவிலான்பேர்
தொழுவர்கம்மியரோமற்றைத்தொழில்செய்வோர்நாமமாகும்
வழுவிலாவாயிலாளர்வாயில்காப்போர்தம்பேரோ. (௫௫)

அரிவையங்கனைமடந்தையாடவளாட்டிமாயோள்
சுரிகுழன்மகடூஉக்காந்தைசுந்தரிவநிதைமாது
தெரிவைமாநிநியேநல்லாள்சிறுமியேதையனாரி
பிரியைகாரிகையணங்குபிணாப்பெண்டுபேதைபெண்பேர். (௫௬)

திண்ணியன்பேர்—வயவன் - திறலோன் - வண்டன் - மிண்டன் - மள்ளன் - வியவன் - விறலோன் - மீளி - வீரன். ஆ ௯.
தானைத்தலைவர்பெயர்—கூளியர் - எருளர் - வாளுழவர் - மள்ளர் - மறவர் - படர். ஆ. ௬.

பகைவர்பெயர்—அரிகள் - செறுநர் - சேரார் - அமரார் - உள்ளார் - நள்ளார் - மருவலர் - தெவ்வர் - மாணூர் - மாற்றலர் - மன்னூர் - ஒன்னூர் - தரியலர் - ஒட்டார் - விட்கார் - சார்பிலார் - பற்றூர் - செற்றூர் - பரர் - கேளார் - ஒல்லார். ஆ உக.

மேவினர்பெயர்—ஒல்லுநர் - தொடர்ந்தார் - சேர்ந்தார் - ஒட்டுநர் - பெட்டார் - வேட்டார் - புல்லுநர் - பசைந்தார் - மித்திரர் - புரிந்தார் - ஆர்வலர் - விழைந்தார் - நல்லவர் - காதலித்தார் - நள்ளுநர் - நயந்தார் - கூட்டம் - ஒன்றுநர். ஆ ௰அ.

சுற்றத்தின்பெயர்—உற்றவர் - இருளை - நட்டோர் - உறவு - ஒக்கல் - கிளை - சார்ந்தோர் - பற்றினர் - சிறந்தோர் - நட்பு - பந்தம் - பரிசநம் - கேள் - நண்பு - கூளி - குடும்பம் - கடும்பு - நள்ளி - பாசநம். ஆ ௰௯.

கீழோர்பெயர்—பொறியிலார் - கயவர் - நீசர் - புள்ளுவர் - புல்லர் - தீயோர் - சிறியசிந்தையர் - கறிட்டர் - தீக்குணர் - தீம்பர் - தேரார் - முறையிலார் - முசுண்டர் - மூர்க்கர் - முசுடர் - பல்லவர் - கையர் - கலர் - பூரியர். ஆ ௰௯.

அறிவிலான்பேர்—முழுமகன் - சிதடன் - பேதை - மூடன் - மண்ணை - அஞ்ஞை - இழுதை - மடன் - ஆதன் - ஏழை. ஆ ௰.
தொழில்செய்வோர்பெயர்—தொழுவர் - கமமியர். ஆ உ.
வாயில்காப்போர்பேர்—வாயிலாளர். (க)

பெண்பேர்—அரிவை - அங்கனை - மடந்தை - ஆடவள் - ஆட்டி - மாயோள் - சுரிகுழல் - மகடூ - காந்தை - சுந்தரி - வநிதை - மாது - தெரிவை - மாதிறி - நல்லாள் - சிறுமி - தையல் - நாரி - பிரியை - காரிகை - அணங்கு - பிணா - பெண்டு - பேதை. ஆ உ௪.

ஆடவன்மைந்தன்காளையாடூவேமகன்புமானே
நீடியகுமரனேழுநிருமித்தபுருடனும
நாடிய நம்பியோடுநங்கையென்றிரண்டாண்பெண்ணைத்
தேடியகவிகளெல்லாஞ்சிறப்பிக்குநாமமாமே. (௬௭)

பேதையேபெதும்பைமங்கைபெருகியமடந்தையோடு
தீதிலாவரிவைமற்றைத்தெரிவைபேரிளம்பெண்ணென்ப
வேதமில்பருவமாண்டேழெய்துபன்னொன்றுபன்மூன்
றேறுபத்தொன்பானையைந்துடன்முப்பத்தொன்றெண்ணந்
[தே. (௬௮)

முன்னியகைம்மைபெற்றோன்மொழிந்தகோளகனேயாகும்
பின்னைவேற்றோற்குப்பெற்றபிள்ளைகுண்டகனேயென்ப
பன்னிவாழ்க்கைப்படாமுன்படர்ந்தொருகள்வினாலே
கந்நியேபெற்றபிள்ளைகானீநனென்றேயோதும். (௬௯)

உயர்ந்தநாற்குலத்திலாண்பெண்ணுயர்விழிவிரண்டுங்கூடி
யியங்கியபிள்ளைப்பேரோயநுலோமனென்றுகூறு
நயந்தவப்பெண்ணுமாணுநண்ணியவுயர்வுதாழ்வில்
வியந்திடும்பிள்ளைப்பேரோவிறற்பிரதிலோமனுமே. (௭0)

பெருத்தவவ்வநுலோமன்னேபிரதிலோமனென்றபேரி
லுரைத்தவாண்பெண்ணில்வந்தேயுற்றவனந்தராள
னிரைத்தவர்மாறிக்கூடிப்பிறந்தவனீண்டபேரோ
விரித்ததுவினவிக்கேட்கில்விராத்தியனென்னுநூலே. (௭௧)

முந்தியகுரத்தியத்தைமுதல்விகோமாட்டியாசா
டந்திடுமிறைவியையைசாமியேதலைவிநாம
நந்தியபின்டிவாமனன்னெறிவழாதுநோற்பாள்
கந்தியேயௌவையம்மைகந்நியேகௌந்தியென்ப. (௭௨)

கைம்மையேகைநிபூண்டகலன்கழிம்டந்தையேங்கி
விம்மியவித்வைநான்கேயமங்கலைவிளங்குநாம
மைம்மையேவந்தியென்பமலடிக்குவகுத்தபேராஞ்
செம்மையாங்கோலஞ்செய்வாடிகழ்வண்ணமகளேயென்ப. (௭௩)

புருடன்பெயர்—ஆடவன் - மைந்தன் - காளை - ஆடூ - மகன் - புமாந்-குமரன். ஆ௳. ]ஆணைச்சிறப்பிக்கும்பெயர்—நம்பி. (௧)
பெண்ணைச்சிறப்பிக்கும்பெயர்—நங்கை. (௧)

பெண்பாற்குரியபருவமாவன—பேதை - பெதும்பை - மங்கை - மடந்தை - அரிவை - தெரிவை - பேரிளம்பெண்.—முறையேயி வற்றினுண்டாவன. (௭) (௰௧) (௰௫) (௰௯) (உ௫) (௩௧) (௪௰)

கைம்மைபெற்றோன்பெயர்—கோளகன். (௧) ] வேற்றோற்குப் பெற்றபிள்ளையின்பெயர்—குண்டகன். (௧) ] கந்நிபெற்றபிள் ளையின்பெயர்—காநீதன். (௧)

உயர்ந்தநாற்குலத்து ளுயர்குலத்தானு மிழிகுலப்பெண்ணுங்கூடிப்பிறந்தபிள்ளையின்பேர்—அநுலோமன். (௧)
உயர்குலப் பெண்ணுமிழிகுலத் தானுங்கூடிப் பிறந்த பிள்ளையின் பேர்—பிரதிலோமன். (௧)

அவ்வநுலோமத்தாணிலும் பிரதிலோமப்பெண்ணிலும் பிறந்தபி ள்ளையின்பேர்—அந்தராளன். (௧)
அநுலோமப்பெண்ணும் பிரதிலோமத்தானுங் கூடிப்பிறந்த பிள் ளையின்பேர்—விராத்தியன். (௧)

தலைவியின்பெயர்—குரத்தி - அத்தை - முதல்வி - கோமாட்டி - ஆச்சாள் - இறைவி - ஐயை - சாமி. ஆ௮. ] நோற்பாள்பெய ர்—கந்தி - ஔவை - அம்மை - கந்தி - கௌந்தி. ஆ௫.

அமங்கலையின்பெயர்—கைம்மை - கைநி - கலன்கழிமடந்தை - விதவை. ஆ௪. ] மலடியின்பேர்—மைம்மை - வந்தி. ஆ௨. கோலஞ்செய்வாள்பெயர்—வண்ணமகள். (௧)

பரத்தையேகணிகைகூளைபயனிலாள்வரைவின்மாது
பொருட்பெண்டுபெறுவகொள்வாள்விலைமகள்போற்றும்வேசை
விருத்தையேமூத்தாளென்பமின்னிடைக்குமரிகந்தி
நிருத்தஞ்செய்மாதுகூத்திநாடகக்கணிகைநீள்பேர். (௬௪)

குட்டநிதொழுத்தைகூளிகுறளியேபடுவிகுண்டந்
துட்டையேயசதியாகுஞ்சூழ்ந்திடும்யுவதியேயீ
ரெட்டாண்டிற்பெண்மதங்கியெய்தியவிறலியென்ப
திட்டமாம்பாடுவிச்சிதம்பதியிரட்டையாண்பெண். (௬௫)

குறவர்கானவரோமள்ளர்குன்றவர்புனவரோடு
மிறவுளர்குறிஞ்சிதன்னிலின்புறுமாக்கள்பேரே
குறியறிகுறத்திமற்றைக்கொடிச்சிபெண்ணிறைவன்றானே
திறன்மிகுமலையன்வெற்பன்சிலம்பன்கானகநாடன்பேர். (௬௬)

கோளுறுமறவரோடுமெயினரேகுறித்தபாலை
யாளர்புள்ளுவரிறுக்கரனைத்துமாமவரோடாடும்
வாள்விழியெயிற்றிமாரோமறத்தியர்தலைவனும
மீளியேகாளையென்பவிடலையுங்கடவதாமே. (௬௭)

குறவர்மாகுலவர்வெய்யகுன்றவர்கிராதர்மற்றை
மறவர்கானவரேதீயவநசரர்சவரர்சொல்லு
முறையழிகொலைஞர்பாவமூர்த்திகண்முருடர்சற்றும்
பொறையிலாரெயினர்வேடர்புளிஞரீரேழ்பொதுப்பேர். (௬௮)

முல்லையர்பொதுவரண்டர்முந்துகோவிந்தரேயான்
வல்லவர்குடவர்பாலர்மதித்தகோவலர்கோபாலர்
சொல்லியவமுதராயர்தொறுவரேயிடையரென்ப
முல்லையின்மாக்கள்பேர்தாமுந்நான்குமொன்றுமாமே. (௬௯)

தொறுவியேபொதுவியாய்ச்சிசூழ்ந்திடுங்குடத்திமற்றை
நிறைபுணரிடைச்சிமுல்லைநிலத்திற்பெண்ணுமமைந்தாங்
குறைவறுகானநாடன்குறும்பொறைநாடனோடு
முறைசெயுமண்ணறோன்றன்முல்லையிற்றலைவனாமம். (௭௰)

வேசையின்பெயர்—பரத்தை - கணிகை - சூளை - பயனிலாள் - வரைவின்மாது - பொருட்பெண்டு - பெறுவகொள்வாள் - விலைமகள். ஆ அ. ] மூத்தாள்பெயர்—விருத்தை. (க) ] குமரியின்பெயர்—கந்நி. (க) ] நாடகக்கணிகைபேர்—நிருத்தமாது - கூத்தி. ஆ உ.

அசதியின்பெயர்—குட்டநி - தொழுத்தை - கூளி - குறளி - படுவி - குண்டம் - திட்டை. ஆ எ. ] பதினாறுண்டிற்பெண்பெயர்—யுவதி. (க) ] பாடுவிச்சிபெயர்—மதங்கி - விறலி. ஆ உ. தம்பதியின்பெயர்—இரட்டை - ஆண்பெண். ஆ உ.

குறிஞ்சிநிலமாக்கள்பேர்—குறவர் - கானவர் - மள்ளர் - குன்றவர் - புனவர் - இறவுளர். ஆ சு. ] குறிஞ்சிநிலப்பெண்பெயர்—குறத்தி - கொடிச்சி. ஆ உ. ], குறிஞ்சிநிலத்திறைவன்பெயர்—மலையன் - வெற்பன் - சிலம்பன் - கானகநாடன். ஆ ச.

பாலைநிலமாக்கள்பெயர்—மறவர் - எயினர் - புள்ளுவர் - இறுக்கர். ஆ ச. மறத்தியர்பெயர்—எயிற்றிமார். (க) ] பாலைநிலத்தலைவன்பெயர்—மீளி - காளை - விடலை. ஆ ௩.

புளிஞர்பொதுப்பேர்—குறவர் - மாகுலவர் - குன்றவர் - கிராதர் - மறவர் - கானவர் - வநசரர் - சவரர் - கொலைஞர் - பாவமூர்த்திகள் - முருடர் - பொறையிலார் - எயினர் - வேடர். ஆ ௰ச.

முல்லைநில்மாக்கள்பேர்—முல்லையர் - பொதுவர் - அண்டர் - கோவிந்தர் - ஆன்வல்லவர் - குடவர் - பாலர் - கோவலர் - கோபாலர் - அமுதர் - ஆயர் - தொறுவர் - இடையர். ஆ ௰௩.

முல்லைநிலப்பெண்பெயர்—தொறுவி - பொதுவி - ஆய்ச்சி - குடத்தி - இடைச்சி. ஆ ரு.

முல்லைநிலத்தலைவன்பேயர்—கானநாடன் - குறும்பொறைநாடன் - அண்ணல் - தோன்றல். ஆ ச.

களமரேதொழுவர்மள்ளர்கம்பளருழவரோடு
விளைஞரேகடைஞரேழ்பேர்விளைவுமருதமாக்க
ளளவறுகடைச்சிமற்றையாற்றுக்காலாட்டிபெண்பே
ருளமகிழ்மகிழ்நனூரன்கிழவனுந்தலைவனுமே. (௭௧)

பரதவர்நுளையரோடுபஃறியர்திமிலர்சாலர்
கருதியகடலர்கோலக்கழியரேநெய்தன்மாக்கள்
விரவியபரத்திமேவுநுளைச்சியேயளத்திநீண்டு
பெருகியகடற்பிணாவேநெய்தலிற்பெண்ணினமம். (௭௨)

கொண்கனேதுறைவனோடுகுறித்தமெல்லன்புலம்பன்
றண்கடற்சேர்ப்பனெய்தற்றலைவனேச்சாற்றுநாமம்
பண்படுமளவர்தாமேபகர்ந்திடுமந்நிலத்தி
லுண்படுமுப்பமைப்போருமணரும்விதித்தபேரே. (௭௩)

அணியினிற்பண்பிலூற்றவுவமையின்மகடூவாடூத்
தணிவின்முன்னிலைப்பேர்வேலூசாற்றியதோற்றமாக
வுணருமைந்திணைப்பாற்பட்டவுரிப்பொருள்சொற்றுமிப்பாற்
கணிதமின்முறைப்பேர்காட்டிக்காயத்தின்பேருஞ்சொல்வாம். (௭௪)

தாதைதன்றாதையேமூதாதையேபாட்டனும்
பேதமொன்றில்லாமற்றும்பிதாமகனென்றுமாகுந்
தாதையேயப்பனையன்றந்தையேயம்மானத்த
னேதமில்பிதாவென்றேழீன்றவனுமாமே. (௭௫)

அவ்வையம்மனையயந்தாளம்மையேயாயேயன்னை
யெவ்வமிலாயிமொய்தாயீன்றவளுமென்பான்
செவ்விதின்வளர்த்ததாதிசெவிலிக்காடாய்கைத்தாயாந்
தவ்வைமுன்பிறந்தாள்சேட்டைதங்கையேபின்னைதானே. (௭௬)

ஞாதியர்தாயத்தாரேநாட்டுந்தங்குடியிற்சுற்ற
மாதுலனம்மான்மாமன்சகலனேர்குடியிற்கொண்டோன்
மூதுணர்சேட்டன்றம்முன்முன்னவனண்ணன்மூத்தோன்
பேதமிலிளவல்பின்னையநுசனேகநிட்டன்பின்னோன். (௭௭)

மருதநிலமாக்கள்பேர்—களமர் - தொழுவர் - மள்ளர் - கம்பளர் - உழவர் - விளைஞர் - கடைஞர். ஆக ௭. ] மருதநிலப்பெண்பேர்—கடைச்சி - ஆற்றுக்காலாட்டி. ஆக ௨. ] மருதநிலத்தலைவன்பெயர்—மகிழ்நன் - ஊரான் - கிழவன். ஆக ௩.

நெய்தனிலமாக்கள்பெயர்—பரதவர் - நுளையர் - பஃறியர் - திமிலர் - சாலர் - கடலர் - கழியர். ஆக ௭.
நெய்தனிலப்பெண்பெயர்—பரத்தி - நுளைச்சி - அளத்தி - கடற்பிணா. ஆக ௪.

நெய்தனிலத்தலைவன்பெயர்—கொண்கன் - துறைவன் - மெல்லன் - புலம்பன் - கடற்சேர்ப்பன். ஆக ௫.
உப்பமைப்போர்பேர்—அளவர் - உமணர். ஆக ௨.

பாட்டன்பெயர்—தாதைதன்றாதை - மூதாதை - பிதாமகன் - ஆக ௩. ] ஈன்றவன்பெயர் - தாதை - அப்பன் - ஐயன் - தந்தை - அம்மான் - அத்தன் - பிதா. ஆக ௭.

ஈன்றவள்பெயர்—அவ்வை - அம்மனை - பயந்தாள் - அம்மை - ஆய் - அன்னை - ஆயி - ஞாய் - தாய். ஆக ௯. ] வளர்த்ததாதியின்பெயர்—செவிலி - கோடாய் - கைத்தாய். ஆக ௩. ] சேட்டையின்பெயர்—தவ்வை - முன்பிறந்தாள். ஆக ௨. ] தங்கையின்பெயர்—பின்னை. (௧)

ஞாதியர்பெயர்—தாயத்தார் - தங்குடிச்சுற்றம். ஆக ௨. ] மாமன்பெயர்—மாதுலன் - அம்மான். ஆக ௨. ] ஓர்குடியிற்கொண்டோன்பெயர்—சகலன். (௧) ] மூத்தோன்பெயர்—சேட்டன் - தம்முன் - முன்னவன் - அண்ணன். ஆக ௪. ] பின்னோன்பெயர்—இளவல் - பின்னை - அநுசன் - கநிட்டன். ஆக ௪.

கணவனேகொழுநன்வேட்டோன்கண்டன்வல்லவனேபத்தாத்
துணைவனே தலைவன்கொண்கன் சூழ்ந்திடுந்தவனேகாந்தன்
மணமகனுரியோனன்பன்மணவாளன்பதியேகேள்வ
னணையுங்காதலன்பேர்பன்னேழன்றிநாயகனுமாமே. (௭௮)

இல்லவளுரிமைபன்னிகுடும்பிநியில்லேயில்லாள்
வல்லவிகளமேதாரமனையாட்டிமனைவிருந்தஞ்
சொல்லியபாரிவாழ்க்கைத்துணைகளத்திரமேகாந்தை
நல்லகாதலிவிரும்புநாயகிதேவிநாமம். (௭௯)

சந்ததிமதலைசூநுத்தநயன்காதலனேமெய்ய
னந்தநன்சிறுவன்றோன்றல்குட்டனேநாட்டுஞ்செம்மன்
முந்தியமருமான்பிள்ளைமுளைசுதன்புதல்வன்புத்திரன் [ (௮௰)
மைந்தன்கால்பொருள்சேயெச்சம்வழிபிறங்கடைமகன்பேர்.

சிறுவிபுத்திரியினோடுசிறந்திடுந்தநயையையை
மறுவில்பந்தைநமதிப்பாமகள்சுதைபுதல்வியேழ்பே
ரிறையாகுமெச்சந்தானிவ்விருபாற்குமேற்குமென்ப
குறுமக்கண்மகார்சிறுணாக்கூறுபவிவர்தம்பன்மை. (௮௧)

தானையேபதாதிவெய்யதந்திரந்தளமேதண்டம்
வானியேககநம்யூகம்வாகிநியநீகம்பாடி
சேனையேகவநங்கூடிச்செறிபலம்பரிகலந்தா
னூநமில்படைமூவைந்தாமுறுபதாகிநியுமப்பேர். (௮௨)

அணியுண்டையொட்டேயூகமாயவைபடைவகுப்பா
மணிநெற்றிகையே தூசியடுபடையுறுப்பின்பேரா
மணிபின்னிற்கூழையாந்தார்கொடிப்படையாகுமென்ப
பணியக்கீழறுதலோடேயறைபோதலபடையறற்பேர். (௮௩)

மக்களேநரரோமாக்கண்மாநவர்மாந்தர்மண்ணோர்
தக்கவாண்டையரோனமந்தர்சாற்றியமநுடரின்பந்
தொக்கமானிடரீரைந்துஞ்சொல்லியமனிதர்பேரா
மக்கடம்பரப்பிற்குப்பேர்மன்பதையைஞ்ஞீலென்ப. (௮௪)

காதலன்பேர்—கணவன் - கொழுநன் - வேட்டோன் - கண்ணா டன் - வல்லவன் - பத்தா - துணைவன் - தலைவன் - கொண்கன் - தவன் - காந்தன் - மணமகன் - உரியோன் - அன்பன் - மணவாளன் - பதி - கேள்வன் - நாயகன். ஆ ௰அ.

தேவிபெயர்—இல்லவள் - உரிமை - பத்நி - குடும்பிநி - இல் - இல்லாள் - வல்லவி - களம் - தாரம் - மனையாட்டி - மனை - விருந்தம் - பாரி - வாழ்க்கைத்துணை - களத்திரம் - காந்தை - காதலி - நாயகி. ஆ ௰அ.

மகன்பேர்—சந்ததி - மதலை - சூநு - தநயன் - காதலன் - மெய்யன் - நந்தநன் - சிறுவன் - தோன்றல் - குட்டன் - செம்மல் - மருமான் - பிள்ளை - மூளை - சுதன் - புதல்வன் - புத்திரன் - மைந்தன் - கால் - பொருள் - சேய் - எச்சம் - வழி - பிறங்கடை. ஆ உச.

புதல்விபேர்—சிறுமி - புத்திரி - தநயை - ஐயை - புத்தரை - மகள் - சுதை. ஆ எ.] எச்சமென்னும்பெயர்—மகன்புதல்விஎன்னுமிவ்விருபாற்குமேற்கும் - இவர்பன்மையின்பெயர்—குறுமக்கள் - மகார் - சிறார். ஆ ரு.

படையின்பெயர்—தானை - பதாதி - தந்திரம் - தளம் - தண்டம் - வானி - ககநம் - யூகம் - வாகிநி - அநீகம் - பாடி - சேனை - சுவநம் - பலம் - பரிகலம் - பதாகிநி. ஆ ௰சு.

படைவகுப்பின்பெயர்—அணி - உண்டை - ஒட்டு - யூகம். ஆ ச.
படையுறுப்பின்பேர்—அணி - நெற்றி - கை - தூசி. ஆ ச.
பின்னணியின்பெயர்—கூழை. (க)] கொடிப்படையின்பெயர்—தார். (க)] படையறற்பேர்—இழுறுதல் - அறைபோதல். ஆ உ.

மனிதர்பேர்—மக்கள் - நரர் - மாக்கள் - மாநவர் - மாந்தர் - மனிதர் - ஆண்டையர் - மைந்தர் - மநுடர் - மானிடர். ஆ ௰.
மக்கட்பரப்பிற்குப்பேர்—மன்பதை - மைஞ்ஞீல். ஆ உ.

உடலுறுப்பங்கம்யாக்கையுயிர்நிலைதேகங்காயஞ்
சடலமேமூர்த்தமெய்யேதாவரந்தநுவாதாரங்
கடமொடுபுதைபுணர்ப்புக்காத்திரம்பூட்சியாகம்
புடைகொள்பூதிகஞ்சரீரம்புற்கலமுடம்பின்பேரே. (அரு)

வடிவமோடுருவமேனிசட்டகம்வடிவின்பேராங்
கடியுநீள்பிரேதம்வேறுகாட்டியசவம்பிணப்பே
ரடையுமற்றப்பேர்தானேகளேபரமழனமென்று
முடலினிற்குறைகவந்தமட்டையூபமுமுரைக்கும். (அசு)

சரணமேபதமேமற்றைத்தாளொடங்கிரியேபாதங்
கருதியசலநமற்றைக்கழலுடனடியுங்காலாம்
பரடென்பகரட்டிருமைம்பற்றியகணைக்கால்சங்கந்
தருமுழந்தாண்முழந்துசாநுவுழதன்பேர்தானே. (அஎ)

தொடையுரூருக்குறங்குநீள்வாமம்கவான்றொடைப்பேர்
கடிதடநிதம்பமென்பவடிவகலல்குலின்பேர்
நடுநுசுப்பொடுமருங்குநாட்டுமத்திமமேயுக்க
மிடையின்பேர்மருங்கின்பக்கமொக்கலையென்பதாமே. (அஅ)

உதரமோடக்குகுக்கியுடன்பண்டிவயிற்றின்பேராந்
திதலையேபொறியேதுத்திதேமலாஞ்சுணங்குமாமே
யிதலையேயுந்திநாபியிலஞ்சியேபோகில்கொப்பூழ்
புதியவாண்குறியேகோசம்பூப்பகம்பெண்ணின்சிந்நம். (அகூ)

அகலமேமருமநெஞ்சேயாகமேயுரமேமார்பா
நகிலமேகொம்மைகொங்கைநறுங்குயந்தநங்குருக்கண்
பகர்பயோதரஞ்சுவர்க்கம்பறம்பிவைமுலையின்பல்பேர்
திகழ்முலைக்கண்ணிருமஞ்சிலீமுகஞ்சுசுகங்கள். (கூ௰)

கரமத்தம்பாணிதோளேகைத்தலநாற்பேராங்கூர்ப்
பரமுழங்கைகிலுத்தம்பணித்திடுமணிக்கட்டின்பே
ரூரவியவகங்கையங்கைகுடங்கையேயுள்ளங்கைப்பேர்
விரல்களங்குலியென்றுகுமிகுமுகிர்நகமதாமே. (கூக)

உடம்பின்பேர்—உடல் - உறுப்பு - அங்கம் - யாக்கை - உயிர்நிலை - தேகம் - காயம் - சடலம் - மூர்த்தம் மெய் - தாவரம் - தநு - ஆதாரம் - கடம் - புதை - புணர்ப்பு காத்திரம் பூட்சி - ஆகம் - பூதிகம் - சரீரம் - புற்கலம். ஆ உஉ.

வடிவின்பேர்—வடிவம் - உருவம் - மேனி - சட்டகம். ஆ ச.
பிணத்தின்பேர்—பிரேதம் - சவம் - களேபரம் - அழனம். ஆ ச.] உடற்குறையின்பெயர்—கவந்தம் - மட்டை - முண்டம். ஆ ங.

காலின்பெயர்—சரணம் - பதம் - தாள் - அங்கிரி - பாதம் - சலநம் - கழல் - அடி. ஆ அ.] கரட்டின்பெயர்—பரடு. (க)] கணைக்காலின்பெயர்—சங்கம். (க)] முழந்தாளின்பெயர்—முழந்து - சாநு. ஆ உ.

தொடையின்பேர்—ஊரு - குறங்கு - வாமம் - கவான். ஆ ச.
அல்குலின்பேர்—கடிதடம் - நிதம்பம். ஆ உ.] இடையின்பேர்—நடு - நுசுப்பு - மருங்கு - மத்திமம் - உக்கம். ஆ ரு.
மருங்கின்பக்கத்தின்பெயர்—ஒக்கலை. (க)

வயிற்றின்பேர்—உதரம் - மோடு - அகடு - குக்கி - பண்டி. ஆ ரு.
தேமலின்பெயர்—திதலை - பொறி - சுத்தி - சுணங்கு. ஆ ச.
கொப்பூழின்பெயர்—இதலை - உந்தி - நாபி - இலஞ்சி - பேகில். ஆ ரு.] ஆண்குறியின்பெயர்—கோசம். (க)] பெண்ணின்சிந்நத்தின்பெயர்—பகம். (க)

மார்பின்பெயர்—அகலம் - மருமம் - நெஞ்சு - ஆகம் - உரம். ஆ ரு.] முலையின்பேர்—நகிலம் - கொம்மை - கொங்கை - குயம் - தநம் - குருக்கள் - பயோதரம் - சுவர்க்கம் - பறம்பு. ஆ கூ.] முலைக்கண்ணின்பெயர்—சிலீமுகம் - சூசுகம். ஆ உ.

கைத்தலத்தின்பேர்—கரம் - அத்தம் - பாணி - தோள். ஆ ச.
முழங்கையின்பெயர்—கூர்ப்பரம். (க)] மணிக்கட்டின்பேர்—கிலுத்தம். (க)] உள்ளங்கையின்பேர்—அகங்கை - அங்கை - குடங்கை. ஆ ங.] விரலின்பெயர்—அங்குலி. (க)] நகத்தின்பெயர்—உகிர். (க)

விறன்மிகுபுயமுமொய்ம்புமேவியவாகுவுந்தோள்
கறையில்கந்தரங்கிரீவங்களங்கண்டங்கழுத்தினுமம்
புறம்வெரிநபரம்வெந்நேபோற்றியமுதுகுநாற்பேர்
சிறுபுறங்கயிலெருத்தஞ்சுவல்பிடர்நிகலந்தோண்மேல். (௬௨)

வதநமாநநமேதுண்டம்வத்திரமுகமென்றுகு
மிதழுதடதரமேபாலிகைமுத்தமென்றும்பேர்மே
லுதடேதயோட்டமாங்கீழுதட்டின்பேரதரமென்றும்
விதமுறுமெயிறுதந்தமேவியதசநம்பல்லே. (௬௩)

பன்னியமுறுவன்மூரல்பல்லுமாநகையுமாகு
முன்னியதாடிகட்டஞ்சுவுகமோவாயின்பேரா
மன்னுநாச்சிகுவைதாளுமற்றைத்தாலுவுநாக்காகுங்
கன்னமேயள்ளுக்கேள்விகாதின்பேர்செவியுமாமே. (௬௪)

அணன்மிடறுகுமற்றையண்ணமேயுண்ணாக்கின்பே
ரணரியேயணலேயண்ணமானமேல்வாய்ப்புறப்பேர்
குணமுறுகவுள்கபோலங்கொடிறநுகதுப்பின்கூற்றுந்
துணைசெயாக்கிராணங்கோணந்துண்டமேநாசிமூக்காம். (௬௫)

நயநநேத்திரமேயக்கநாட்டங்கோநோக்கஞ்சக்கு
ளியனுறும்பார்வைதாளாவிலோசநம்விழியேயக்கி
செயமுறுதிருக்குத்திட்டிதிருட்டியம்பகமேகண்ணு
மயமுறுதாளாகண்ணின்மணிவிளிம்பிமையினமம். (௬௬)

பிருகுடிநுதலேநீண்டபீருவேபுரூம்பூருப்
புருவமாம்புகுடியும்பேர்புடைபடுபனிச்சைசூறை
திருநுதல்குளமிலாடஞ்சேர்ந்தமத்தகமேநெற்றி
மருவியபாலமுண்டமளிகமும்வகுக்கலாமே. (௬௭)

ஊவியதலையேமூர்த்தமுவ்வியோடுத்தமாங்கஞ்
சிரமுடிசென்னிமுண்டஞ்சிகரமத்தகமுமாகுந்
திருமுடிசிமிலிசிக்கஞ்சிகையிவைகுடுமிநாற்பேர்
விரவியசுடிகைசூளிமேவியநவிரமுச்சி. (௬௮)

தோளின்பெயர்—புயம் - மொய்ம்பு - வாகு. ஆ ௩. ]கழுத்தின் பெயர்—கந்தரம் - கிரீவம் - களம் - கண்டம். ஆ ச. ]முதுகின் பேர்—புறம் - வெரிந் - அபரம் - வெந். ஆ ச. ]பிடரின்பெயர்—சிறுபுறம் - கயில் - எருத்தம் - சுவல். ஆ ச. ] தோண்மேலின் பெயர்—திகலம். (க)

முகத்தின்பெயர்—வதநம் - ஆநநம் - துண்டம் - வத்திரம். ஆ ச. உதட்டின்பெயர்—இதழ் - அதரம் - பாலிகை - முத்தம். ஆ ச. மேலுதட்டின்பெயர்—ஓட்டம். (க)]கீழுதட்டின்பெயர்—அதரம். (க) ] பல்லின்பெயர்—எயிறு - தந்தம் - தசநம். ஆ ௩.

பல்லுக்குநகைக்கும்பொதுப்பெயர்—முறுவல் - மூரல். ஆ உ.
மோவாயின்பெயர்—தாடி - கட்டம் - சுவுகம். ஆ ௩.
நாக்கின்பெயர்—நா - சிகுவை - தாளை - தாலு. ஆ ச.
காதின்பேர்—கன்னம் - அள் - கேள்வி - செவி. ஆ ச.

மிடற்றின்பெயர்—அணல். (க)] உண்ணாக்கின்பேர்—அண்ணம். (க)] மேல்வாய்ப்புறத்தின்பெயர்—அணரி - அணல் - அண்ணம். ஆ ௩. ] கதுப்பின்பெயர்—கவுள் - கபோலம் - கொடிறு - அநு. ஆ ச. ]மூக்கின்பெயர்—ஆக்கிராணம் - கோணம் - துண்டம் - நாசி. ஆ ச.

கண்ணின்பெயர்—நயநம் - நேத்திரம் - அக்கம் - நாட்டம் - கோ - நோக்கம் - சக்கு - பார்வை - தாரை - விலோசநம் - விழி - அக்கி - திருக்கு - திட்டி - திருட்டி - அம்பகம். ஆ ௰௩.
கண்மணியின்பெயர்—தாரை. (க) ] கண்ணிமையின்பெயர்—விளிம்பு. (க)

புருவத்தின்பேர்—பிருகுடி - நுதல் - பீரு - புரூரம் - பூரு - புகுடி. ஆ ௬.
நெற்றியின்பெயர்—பனிச்சை - சூறை - நுதல் - குளம் - இலாடம் - மத்தகம் - பாலம் - முண்டம் - அளிகம். ஆ ௯.

தலையின்பெயர்—மூர்த்தம் - உவ்வி - உத்தமாங்கம் - சிரம் - முடி - சென்னி - முண்டம் - சிகரம் - மத்தகம். ஆ ௯.
குடுமியின்பெயர்—முடி - சிமிலி - சிக்கம் - சிகை. ஆ ச.
உச்சியின்பெயர்—சுடிகை - சூளி - நவிரம். ஆ ௩.

உளைநவிர்குடுமிபித்தையோரியேகுழல்கார்குஞ்சி
தளைசிகைதொங்கல்பங்கிதானீராறுண்மயிர்ப்பேர்
வளர்குழல்கதுப்புக்கேசமருவியசுரியனுங்கு
யிளையமைந்தாக்குமற்றையிளங்கொடியார்க்குமேற்கும். (௯௯)

குநள்குழல்விலோதமோதிகூழைகுந்தளமராட்டங்
குரலைம்பாலளகம்பத்தும்பெண்மயிர்கூந்தலும்பேர்
பெருகியகொப்புமுச்சிபின்னகங்கொண்டைபந்தந்
திருமிகுதம்மில்லம்பொற்சிகழிகைமயிர்முடிப்பேர். (௱)

ஓரியேகேசம்பங்கியுளையுரோமம்மராட்ட
மீநருமிப்பேர்களாறும்பிறமயிர்நிகழ்த்துமென்ப
சேருமவ்வுரோமமற்றைச்சிரோந்தமுஞ்செறிமயிர்ப்பேர்
வாருங்குந்தளம்விலோதமயிர்க்குழற்சிப்பேர்வைக்கும். (௱௧)

குடிலமேவேணிநீண்டகோடீரம்பின்னலோடு
சடிலமென்றைந்துபேருஞ்சடையெனவடைவேசாற்று
நெடியகாத்திரமுறுப்புநீளங்கமவ்யவப்பேர்
கடியமூட்டுங்கொளுத்துங்கந்துஞ்சந்தாகுமன்றே. (௱௨)

இணையேசங்கநநநாடிதிருந்தியநரம்புமுப்பே
ரரலையேகழலைகோழையையொடுகாசமாகு
மருவுமங்கிதமேசேக்கைவசிவடுவுடற்றழும்பாந்
தருபொறிவணையிறைப்பேர்சணைநணைபலிதமும்பேர். (௱௩)

அழிதலையோட்டினுமங்கபாலமேயத்தியென்பு
கழிவுறுமெலும்பினுமங்களேபரமென்றுங்காட்டுங்
கழியுடன்முழுவெலும்புகங்காளமென்பர்நூலோர்
விழைபொறிகரணங்கந்தமேவுமிந்திரியமுப்பேர். (௱௪)

தருசுவையொளியூறோசைசாற்றியநாற்றமோருங்
கருவிநாக்கண்மேனமெய்யேகாதொடுமூக்குமாகுந்
தெரிதருமுயிரோயாதன்சேதநன்பசுவேசீவ
னாரியபுற்கலனேகூத்தனனுவியமாசனென்மா. (௱௫)

காப்புச்செய்யுளொன்று. (௱௬)

ஆண்மயிரின்பெயர்—உளை - நவிர் - குடுமி - பித்தை - ஓரி - குழல் - கார் - குஞ்சி - தலை - சிகை - தொங்கல் - பங்கி. ஆ௨ ௰௨. இளையமைந்தர்மயிர்க்கு மிளங்கொடியார்மயிர்க்கு மேற்கும்பொதுப்பெயர்—குழல் - கதுப்பு - கேசம் - சுரியல். ஆ௨ ௪.

பெண்மயிரின்பேர்—குருள் - குழல் - விலோதம் - ஓதி - கூழை - குந்தளம் - மராட்டம் - கூரல் - ஐம்பால் - அளகம் - கூந்தல். ஆ௨ ௰௧. ] மயிர்முடியின்பேர்—கொப்பு - முச்சி - பின்னகம் - கொண்டை - பந்தம் - தம்மில்லம் - சிகழிகை. ஆ௨ ௭.

பிறமயிரின்பேர்—ஓரி - கேசம் - பங்கி - உளை - உரோமம் - மராட்டம். ஆ௨ ௬.
செறிமயிரின்பேர்—உரோமம் - சிரோந்தம். ஆ௨ ௨. ] மயிர்க்குழற்சியின்பேர்—குந்தளம் - விலோதம். ஆ௨ ௨.

சடையின்பெயர்—குடிலம் - வேணி - கோடீரம் - பின்னல் - சடிலம். ஆ௨ ௫.
அவயவத்தின்பேர்—காத்திரம் - உறுப்பு - அங்கம். ஆ௨ ௩.
சந்தின்பெயர்—மூட்டு - கொளுத்து - கந்து. ஆ௨ ௩.

நரம்பின்பேர்—சிரை - சங்கநரம் - நாடி. ஆ௨ ௩.
கழலையின்பெயர்—அாலை. (௧) ] கோழையின்பெயர்—ஐ - காசம். ஆ௨ ௨. ] உடற்றழும்பின்பெயர்—அங்கிதம் - சேக்கை - வசி - வடு. ஆ௨ ௪. ] இறையின்பேர்—பொறி - வரை. ஆ௨ ௨.
நரையின்பேர்—சரை - பலிதம். ஆ௨ ௨.

தலையோட்டின்பெயர்—கபாலம். (௧)
எலும்பின்பெயர்—அத்தி - என்பு - களேபரம். ஆ௨ ௩.
கழியுடலின்முழுவெலும்பின்பெயர்—கங்காளம். (௧)
இந்திரியத்தின்பெயர்—பொறி - கரணம் - கந்தம், ஆ௨ ௩.

சுவை - ஒளி - ஊறு - ஓசை - நாற்றம் - இவற்றைமுறையேயோருங்கருவியாவன - நா - கண் - மெய் - காது - மூக்கு. ]உயிரின்பெயர்—ஆதன் - சேதநன் - பசு - சீவன் - புற்கலன் - கூத்தன் - அணு - இயமானன் - ஆன்மா. ஆ௨ ௯.

இருபதோடிருபான்முப்பானிருபானீரைந்துமேலு
மருவியவாறுசெய்யுண்மக்கடம்பெயர்க்குச்செய்தான்
குருநறுங்குன்றைவேந்தன் குணபத்திரன்றந்தநோன்மை
தருநெறிநோற்கும்வீரைதழைத்தமண்டலவன்றுனே. (௱௭)

இரண்டாவதுமக்கட்பெயர்த்தொகுதிமுற்றிற்றுமுற்றும்.



# மூன்றாவது

## விலங்கின் பெயர்த் தொகுதி

## காப்பு.

துலங்குமுக்குடைநிழற்றத் துந்துமிமுழங்கத்தேவர்
நலம்பெறுகவரிவீசநன்மலர்மாரிதூவ
வலங்குளையரியணைக்கீழமர்ந்தநான்முகனைப்போற்றி
விலங்கின்பேர்த்தொகுதிதன்னைமேதினிவியப்பச்சொல்வாம். (௧)



அரிவயப்போத்துச்சீயமறுகுகேசரியேபூட்கை
மருவியமிருகராசன்வயமாவேமடங்கலோடு
பரவுகண்டீரவம்பஞ்சாநநஞ்சிங்கப்பல்பேர்
பெருகியயானையாளிப்பேர்யாளியறுகுபூட்கை. (௨)

வல்லியம்வயமாவோடுசித்திரகாயமற்றும்
வெல்லுமாவுழுவைபாய்மாவியாக்கிரந்தரக்குவேங்கை
கொல்லவேயெழுந்துசீறுங்குயவரிகொடுஞ்சார்த்தூலம்
புல்லொடுபுண்டரீகங்கொடுவரிபுலியினாமம். (௩)

தும்பிமாதங்கந்தூங்கரேற்கறையடியெறும்பி
யும்பல்வாரணம்புழைக்கையொருத்தல்வல்விலங்குநாகங்
கும்பிநால்வாயேபூட்கைகுஞ்சரங்கரிணியத்தி
கம்பமேவேழம்மூவாவேகரிகயங்களிறுகைம்மா. (௪)

சிந்துரம்வயமாவேகஞ்செறியிபம்புகர்முகங்க
டந்தியேமதாவளந்தந்தாவளம்வழுவையாம்பண்
மந்தமாமருண்மாமற்றைமதகயம்போதகத்தோ
டுந்துமேழைந்துமேலுமிரண்டுமேற்றுயர்ந்தயானை. (௫)

உதவிசெய்தினத்தைக்காக்குழும்பலேயூதநாதன்
மதகயமதோற்கடம்பின்வாலின்பேர்தாலவட்ட
மதனுனிவேசகந்தானுமுதுகின்பேர்மஞ்சா
ம்தகமுங்கும்பந்தானுமத்தகமென்றுகூறும். (௬)

கரடமேமதம்பாய்கின்றகவுடுகைந்நுதிகளேபுட்
கரமதாமதத்தினாமங்கடங்கடாந்தானமாகும்
பெருகியபிருதுமாநம்பேசுகொம்பினெடுப்பேர்
கருதுகோடெயிறுதந்தந்திரியாணங்கடைக்கணமே. (௭)

கண்டகுளிகையினமஞ்செவியடிகவுள்கதுட்பாம்
விண்டகையுமிழுநீரோவிலாழிபல்லடிகரீரங்
கொண்டகாத்திரமேமுன்கால்கூதியவபரம்பின்கா
லுண்டைதொண்டலந்துதிக்கைசேவகந்துயிலிடப்பேர். (௮)

சிங்கத்தின்பெயர்—அரி - வயப்போத்து - சீயம் - அறுகு - கேசரி - பூட்கை - மிருகராசன் - வயமா - மடங்கல் - கண்டீரவம் - பஞ்சாநநம். ஆக ௰௧.

யானையாளியின்பெயர்—யாளி - அறுகு - பூட்கை. ஆக ௩.

புலியின்பெயர்—வல்லியம் - வயமா - சித்திரகாயம் - வெல்லுமா - உழுவை - பாய்மா - வியாக்கிரம் - தரக்கு - வேங்கை - குயவரி - சார்த்தூலம் - புல் - புண்டரீகம் - கொடுவரி. ஆக ௰௪.

யானையின்பெயர்—தும்பி - மாதங்கம் - தூங்கல் - தோல் - கறையடி - எறும்பி உம்பல் வாரணம் - புழைக்கை - ஒருத்தல் - வல்விலங்கு - நாகம் - கும்பி - நால்வாய் - பூட்கை - குஞ்சரம் - கரிணி அத்தி - வேழம் - உவா - கரி - கயம் - களிறு - கைம்மா. (௨௪)

சிந்துரம் - வயமா - இபம் - புகர்முகம் - தந்தி - மதாவளம் - தந்தாவளம் - வழுவை - ஆம்பல் - மந்தமா - மருண்மா - மதகயம் - போதகம். ௰௯. ஆக ௯௭.

இனத்தைக்காக்குமும்பலின்பெயர்—யூதநாதன். (௧)] மதகயத்தின்பெயர்—மதோற்கடம். (௧)] வாலின்பெயர்—தாலவட்டம். (௧) வானுளியின்பெயர்—வேசகம். (௧)] முதுகின்பெயர்—மஞ்சு. (௧) மத்தகத்தின்பெயர்—மதகம் - கும்பம். ஆக ௨.

மதம்பாய்சுவட்டின்பெயர்—கரடம். (௧)] கைந்நுதியின்பெயர்—புட்கரம். (௧)] மதத்தின்பெயர்—கடம் - கடாம் - தானம். ஆக ௩. கொம்பினடிப்பெயர்—பிருதுமாநம். (௧)] தந்தத்தின்பெயர்—கோடு - எயிறு. ஆக ௨.] கடைக்கண்ணின்பெயர்—நிரியாணம். (௧)

சூளிகையின்பெயர்—செவியடி. (௧)]. கவுளின்பெயர்—கடிப்பு. (௧)] துதிக்கையுமிழ்நீரின்பெயர்—விலாழி. (௧)] பல்லடியின்பெயர்—கரீரம். (௧)] முன்காலின்பெயர்—காத்திரம். (௧)] பின்காலின்பெயர்—அபரம். (௧)] துதிக்கையின்பெயர்—தொண்டை - தொண்டலம். ஆக ௨.] துயிலிடத்தின்பெயர்—சேவகம். (௧)

வடவையத்திரியிரண்டும்பிடிகளாங்கரிணியும்பேர்
கடகம்யானைத்திரட்பேர்கயந்தலைபோதகங்க
டுடியடிகளபமோடுகயமுநியானைக்கன்றும்
படுகுழிபயம்பாமென்பபாகலம்யானைநோயே. (௯)

பரிதுரகஞ்சிறந்தபாடலங்கிள்ளைபாய்மாத்
துரகதம்வாசியுன்னிதூசிகந்தருவங்கற்கி
யரியயமிவுளிமாவேயச்சுவம்புரவிகோரங்
குரகதங்கோணங்கொக்குக்கொய்யுளைசடிலங்கோடை. (௰)

கந்துகங்கனவட்டம்போர்காட்டும்பத்திரிதுரங்கங்
குந்தமத்திரியாறைந்துங்குதிரையினாமமாகும்
வந்தமேசகத்தினோடுசுவல்குசைமயிர்குளம்பு
வந்தபேர்குரங்குரச்சைமாதிகமதுபோமார்க்கம். (௰௧)

குலவியபசுவின்பேரான்கோக்குடஞ்சுரபியாவே
யிலகியநிரையேதேநுப்பெற்றமிவ்வெட்டுமாகும்
பலமுறுகபிலைதேநுப்பரவியகடவுணல்லான்
மலடுதான்வற்சையீற்றுவற்சலங்கன்றுவற்சம். (௰௨)

பரவுமோரீற்றுக்கிட்டிபத்திரைநற்பசுப்பேர்
சுரைமுலையாகுமற்றைச்சுதைகுணமிலாப்பசுப்பேர்
செருத்தலாபீநமென்பசெறிமுலைமடியினாம
நிரைதொறுக்காலிகோட்டநீண்டகாலேயங்கூட்டம். (௰௩)

பாறல்சேப்பெற்றம்பூணிபாணடில்கொட்டியமிருலே
யேறொடுமூரிபுல்லமெருத்தின்பேரிமின்முரிப்பாம்
பாறல்பொருத்தினாமம்பகடுந்தூர்வகமுமாகு
மேறுக்கநரையேநந்தியிடபமாங்கூளியும்பேர். (௰௪)

தூர்வகந்துரியமென்பபொதியெருதெருமையின்பேர்
காரானேவடவைமேதிசைரியங்கவரிகாரா
ஆமரியேமகிடமெட்டுமொழியுமற்றுண்பொதுப்பேர்
பாரியகடாவினோடுபகடாமைமலட்டினாமம். (௰௫)

பிடியின்பெயர்—வடவை - அத்திநி - கரிணி. ஆக ௩. ]யானைத்தி ரளின்பெயர்—கடகம். (௧)] யானைக்கன்றின்பெயர்—கயந்தலை - போதகம் துடியடி - களபம் - கயமுநி. ஆக ௫. ]யானைப்படுகுழி யின்பெயர்—பயம்பு. (௧) ]யானைநோயின்பெயர்—பாகலம். (௧)

குதிரையின்பெயர்—பரி - துரகம் - பாடலம் - கிள்ளை - பாய்மா - துரகதம் - வாசி - உன்னி - துசி - கந்தருவம் - கற்கி - அரி - அயம் - இவுளி - மா - அச்சுவம் - புரவி - கோரம் - குரகதம் - கோணம் - கொக்கு - கொய்யுளை - சடிலம் - கோடை. (௨௪)

கந்துகம் - கனவட்டம் - பத்திரி - துரங்கம் - குந்தம் - அத்திரி. (௬) ஆக ௩௰. ] குதிரைமயிரின்பெயர்—மேசகம் - சுவல் - குசை. ஆக ௩. ] குதிரைக்குளம்பின்பெயர்—குரம் - குரச்சை. ஆக ௨. குதிரைபோமார்க்கத்தின்பெயர்—மாதிகம். (௧)

பசுவின்பெயர்—ஆன் - கோ - சுடம் - சாபி - ஆ - நிரை - தேநு - பெற்றம். ஆக ௮. ]கடவுட்பசுவின்பெயர்—கபிலை - தேநு. ஆக ௨. ] மலட்டுப்பசுவின்பெயர்—வற்சை. (௧)] ஈன்றபசுவின் பெயர்—வற்சலம். (௧) ]பசுவின்கன்றின்பெயர்—வற்சம். (௧)

ஓரீற்றுப்பசுவின்பெயர்—கிட்டி. (௧)] நற்பசுவின்பெயர்—பத்திரை. (௧) ]பசுவின்முலைப்பெயர்—சுரை. (௧) ]துணையிலாப்பசுவின்பெயர்—சுதை. (௧) ] முலைமடியின்பெயர்—செருத்தல் - ஆபீநம். ஆக ௨. ]பசுக்கூட்டத்தின்பெயர்—நிரை - தொறு - காலி - கோட்டம் - காலேயம். ஆக ௫.

எருத்தின்பெயர்—பாறல் - சே - பெற்றம் - பூணி - பாண்டில் - கொட்டியம் - இருல் - ஏறு - மூரி - புல்லம். ஆக ௰. ] எருத்தின்முரிப்பின்பெயர்—இமில். (௧) ]பொருத்தின்பெயர்—பாறல் - பகடு - தூர்வகம். ஆக ௩. ] இடபத்தின்பெயர்—ஏறு - உக்கம் - நரை - நந்தி - கூளி. ஆக ௫.

பொதியெருதின்பெயர்—தூர்வகம் - துரியம். ஆக ௨. ] எருமையின்பெயர்—காரான் - வடவை - மேதி - சைரிபம் - கவரி - காரா - மூரி - மகிடம். ஆக ௮. ]எருமையாண்பொதுப்பெயர்—கடா - பகடு. ஆக ௨. ] மலட்டெருமையின்பெயர்—மை. (௧)

அருணஞ்செம்மறியேமோத்தையாசமுதகருடவேகொச்சை
துருவைமேழகம்வற்காலிதுள்ளலேபள்ளைவெள்ளை
வருடைமேடங்கடாமைமறிவெறிகொறியேசாகம்
பருவையேதகர்மூவேழுமிரண்டுமாட்டின்பொதுப்பேர். (௰௬)

துருவைமைகொறிமூப்பேருந்தோற்றுஞ்செம்மறியாட்டின்பே
செருமலிதகர்கடாவேதின்னகமேழகங்கள் [ர்
பரவுகம்பளமென்றைந்தும்பற்றுமவ்வாணின்பல்பேர்
மருவியகுட்டன்சோரன்மறிபறழ்குட்டியாமே. (௰௭)

வெள்ளைவற்காலிகொச்சைவெள்ளாட்டினாமமாகும்
வெள்ளையேயதன்மறிப்பேர்மேவியசெச்சைசாகந்
துள்ளியமோத்தைமூப்பேர்சாற்றுமேயிவற்றினாண்பேர்
வள்ளியசரபத்தோடுவருடையும்வரையாடாமே. (௰௮)

கேழலேயரிகுரோட்டங்கிரிகிடிகிருட்டியேன
மோழலேயிருளிமுந்துவல்லுளிகளிறுமைம்மா
போழ்முகக்கோட்டுமாவேபோத்திரிவராகங்கோலஞ்
சூழுமீரொட்டேம்பன்றிசூகரமெறுழியும்பேர். (௰௯)

சல்லியமுழவுமாவேயெய்யொடுசல்லபங்கள்
சொல்லியமுன்மாவின்பேர்சொற்றவிப்பன்றிமுள்ளுச்
சல்லமுஞ்சலமுமாகுங்குடாவடிகரடிதானும்
பல்லுகம்பல்லமென்கோளியமுமெலுவும்பன்னும். (௨௰)

சவரியேகவரியுஞ்சாமரமென்றும்பேராங்
சவரிமாவின்பேர்பட்டமாநமாவெகினுங்காட்டுங்
கவயமாவாமாகாட்டாகாத்திரிநகுலமென்று
இவையிருபேருமன்றித்தீர்வையுங்கீரியாமே. (௨௧)

அரிணஞ்சாரங்கரவ்வியடலுழைபிணையேகுந
மிருகமேமறிகுரங்கமேவுமானெண்மூம்பே
ர்கலைச்சபம்மபுல்வாய்கலைகருமானுமேற்கு
மிரலைபுல்வாய்க்கும்பேராமென்றனர்குன்றுநூலோர். (௨௨)

ஆட்டின்பொதுப்பெயர்—அருணம் - செம்மறி - மோத்தை - அசம் - உதள் - உடு - கொச்சை - துருவை - மேழகம் - வற்காலி - துள்ளல் - பள்ளை - வெள்ளை - வருடை - மேடம் - கடா - மை - மறி - வெறி - கொறி - சாகம் - புருவை - தகர். ஆ௨ ௨௩.

செம்மறியாட்டின்பெயர்—துருவை - மை - கொறி. ஆ௩. செம்மறியாட்டாணின்பெயர்—தகர் - கடா - திண்ணகம் - மேழகம் - கம்பளம். ஆ௫. ] ஆட்டுக்குட்டியின்பெயர்—குட்டன் - சோரன் - மறி - பறழ். ஆ௪.

வெள்ளாட்டின்பெயர்—வெள்ளை - வற்காலி - கொச்சை. ஆ௩. வெள்ளாட்டுக்குட்டியின்பெயர்—வெள்ளை. (க) ] வெள்ளாட்டாணின்பெயர்—செச்சை - சாகம் - மோத்தை. ஆ௩. வரையாட்டின்பெயர்—சரபம் - வருடை. ஆ௨.

பன்றியின்பெயர்—கேழல் - அரி - குரோட்டம் - கிரி - கிடி - கிருட்டி - ஏனம் - மோழல் - இருளி - வல்லுளி - களிறு - மைம்மா - கோட்டுமா - போத்திரி - வராகம் - கோலம் - சூகரம் - ஏறுழி. ஆ௰அ.

முள்ளம்பன்றியின்பெயர்—சல்லியம் - முழவுமா - ஏய் - சல்லபம். ஆ௪. ] முட்பன்றிமுள்ளின்பெயர்—சல்லம் - சலம். ஆ௨. கரடியின்பெயர்—குடாவடி - பல்லுகம் - பல்லம் - எண்கு - உளியம் - எலு. ஆ௬.

சவரியின்பெயர்—கவரி - சாமரம். ஆ௨. ] கவரிமாவின்பெயர்—பட்டம் - மாநமா - ஏகின். ஆ௩. ] காட்டாவின்பெயர்—கவயமா - ஆமா. ஆ௨. ] கீரியின்பெயர்—காத்திரி - நகுலம் - தீர்வை. ஆ௩.

மானின்பெயர்—அரிணம் - சாரங்கம் - நவ்வி - உழை - பிணை - சூநம் - மிருகம் - மறி - குரங்கம் - எணம். ஆ௰. ] கலையின்பெயர்—இரலை - வச்சயம் - புல்வாய் - கருமான். ஆ௪. புல்வாயின்பெயர்—இரலை. (க)

கழுதையின்பேர்வாலேயபங்கர்த்தபங்காளவாயே
கலத்திரியேகோகுவேசரிகரமுமாகுங்
குழைவுறுவேசரிப்பேர்கோவேறுகழுதைக்கூற்று
மழுவியலாட்டகந்தாசேரமத்திரிநெடுங்கழுத்தல். (௨௩)

ஓரிகோமாயுவூளனெண்டனேயிகலன்சம்பு
பூரிமாயுக்குரோட்டஞ்சிருகாலனரியேபோற்று
மோரியேகோலாங்கூலமுற்றனைமுகனேகள்வன்
சீரியகலையோடைந்துமுசுவெனச்செப்பலாமே. (௨௪)

சூரானேமுடுவல்பாசிபுரோகதிசுனகன்குக்கல்
கூராமேலெயகினனக்கன்குணாமுகன்ஞமலிஞாளி
சாரமேயன்சுணங்கன்சுவாவேநாய்தானேழ்முப்பேர்
வாரியமுடுவல்பெண்ணாய்விருகங்கொக்கிரண்டுஞ்செந்நாய். (௨௫)

வெருகுடனலவனோதிவிடருகம்விலாளம்பூசை
பொருதுமார்ச்சாலம்பாக்கனிற்புலிபூனையொன்பான்
மருமிகுதுருக்கநானமான்மதநரந்தநான்குங்
கருதுகத்தூரியின்பேர்காட்டியமறுவிநாவி. (௨௬)

வலிமுகங்கடுவன்பாயும்வாநரமரியேமந்தி
பிலவங்கங்கோகிலங்கான்பெயர்ந்தகோடரமேயூகங்
கலகமர்க்கடமேநாகங்கவிகுரங்கிவையீராறுங்
குலவுகாருகமேயூகங்கூறியகருங்குரங்கே. (௨௭)

சாய்ந்தசாயாநதங்கள்சரடமேகாமரூபி
யோந்திதண்டோமான்கோம்பியோதியேமுசலியோத்தி
சூழ்ந்தமூஞ்சூறுசுண்டன்சுந்தரிசுவவுமாமே
யாய்ந்திடுசிகரியாகோடிரும்பனுமகழெலிப்பேர். (௨௮)

கருட்பைகாரொலியினுடங்கள்தந்துந்துளமேயாகும்
பெருச்சாளிமூடிகத்தோடுந்துருவென்றும்பேராம்
வரிப்புறம்வெளிலணிற்பேர்வருந்தடிமுசலிகோதா
தரித்தெழுமுடும்பினுடஞ்சசமுயலென்னலாமே. (௨௯)

கழுதையின்பெயர்—வாலேபம்- கர்த்தபம் காளவாய் அத்திரி - கோகு - வேசரி - கரம். ஆ எ.
கோவேறுகழுதையின்பெயர்—வேசரி. (க) ] ஒட்டகத்தின்பெயர்—தாசேரம் - அத்திரி - நெடுங்கழுத்தல். ஆ ரு.

நரியின்பெயர்—ஓரி - கோமாயு -ஊளன் - ஒண்டன் - இகலன் - சம்பு - பூரிமாயு - குரோட்டம் - சிருகாலன். ஆ கூ.
முசுவின்பெயர்—ஓரி -கோலாங்கூலம் -மைம்முகன் - கள்வலி - கலை. ஆ ரு.

நாயின்பெயர்—ஞான் - முடுவல் - பாசி - புரோகதி - சுநகன் - குக்கல் - கூரன் -ஏகினன் - அக்கன் - குணமுகன் - ஞமலி- ஞாளி - சாரமேயன் - சுணங்கன் - சுவா. ஆ ௰ரு. ]பெண்ணாயின்பெயர்— முடுவல். (க) ]செந்நாயின்பெயர்—விருகம் - கொக்கு. ஆ உ.

பூனையின்பெயர்—வெருகு - அலவன் - ஓதி - விடருகம் - விலாளம் - பூசை - மார்ச்சாலம் - பாக்கன் - இற்புலி. ஆ கூ.
கத்தூரியின்பெயர்—அருகக்ம் - நானம் - மான்மதம் - நரந்தம். ஆ ச.]நாவியின்பெயர்—மறுவி. (க)

குரங்கின்பெயர்—வலிமுகம் - கடுவன் - வாநரம் - அரி - மந்தி- பிலவங்கம் - கோகிலம் - கோடரம் - யூகம் - மர்க்கடம் - நாகம் - கவி. ஆ ௰உ.
கருங்குரங்கின்பெயர்—காருகம் - யூகம். ஆ உ.

ஓந்தியின்பெயர்—சாயாநதம்-சரடம் - காமரூபி -ஓந்தி- தண்டு- ஓமான் - கோம்பி - ஓதி - முசலி. ஆ கூ.
மூஞ்சூறின்பெயர்—சுண்டன் - சுந்தரி - சுவ்வு. ஆ ரு.
எலியின்பெயர்—சிகரி - ஆகு - இரும்பன். ஆ ரு.

காரெலியின்பெயர்—கருப்பை. (க) ] பெருச்சாளியின்பெயர்— களதம் - துந்துளம் - ஆகு - மூடிகம் -உந்துரு. ஆ ரு.
அணிலின்பெயர்—வரிப்புறம் - வெளில். ஆ உ. ]உடும்பின்பெயர்—தடி - முசலி- கோதா. ஆ ரு.] முயலின்பெயர்—சசம்.(க)

கடுவன்மாவொருத்தல்போத்துக்கலைதகர்களிறுசேவ
லொடுபகடும்பலேறேடோரியீரா றுமாண்பேர்
வடுவறுகுராங்குபூனைமற்றிவைகடுவனுமே
யடுதிறல்யானைபன்றியாடல்வெம்புலிமாவாம். (௫௰)

கரடிபுல்வாய்மான்யானைகவரியோடெருமைபன்றி
பொருபுலிமரையென்றென்பான்போற்றியவொருத்தலாகு
மரைபசுப்புலியேபூனைமற்றைப்புல்வாயும்போத்தாங்
கருதியமுசுவுமானுங்கலையெனக்காட்டலாமே. (௫௧)

குருவாடுவேழம்யாளிசுறுத்தகவொன்றேசொல்லுங்
கரியொடுசுறவுபன்றிகளிறெனக்காட்டலாமே
செருமலிகோழியன்னஞ்சேவலென்றோதலாகு
மெருமையோடியானைபெற்றம்பகடிபமும்பலாமே. (௫௨)

௯

ஆனுடனெருமைபன்றியாய்மயிர்க்கவரிசங்கு
மானொடுமரைபுல்வாய்மாறுகொள்சுறவுமேரு
மூனுகர்நரியினோடுமுசுவிவையோரியாகு
மானநூல்விலங்கினுணின்மரபெனவுடைத்தவாறே. (௫௩)

பிடிபிணைபெட்டைமந்திபிணாவோடானுகுபாட்டி
கொடுவிலங்கின்பெண்பாலாங்குஞ்சரங்கவரியோடு
நெடியவொட்டகமிம்மூன்றுநெடும்பிடிநிகழ்த்துநாமம்
வடிவுளவுழைபுல்வாய்நாய்வராகமேபிணையின்வைக்கும். (௫௪)

ஒட்டகங்கழுதைவாசியுறுசிங்கமரையிவ்வைந்தும்
பெட்டையாமுசுவோடேகம்பேசியகுரங்குமந்தி
பட்டபுல்வாய்நாய்பன்றிபகர்ந்திடும்பிணாவெனும்பேர்
கட்டியவெருமைபெற்றங்காட்டுளமரையேயானும். (௫௫)

எருமையேமரையேபெற்றமேற்றநீர்ச்சாதிநாகா
நரிபன்றிநாயிம்மூன்றுநாட்டியபாட்டியாகும்
பெருகுபெண்பால்பிணாப்பெண்பேனுமாணையுமானும்
பொருவினூலுணர்ந்துசொன்னபுலவர்தம்வாக்குத்தானே. (௫௬)

( விலங்கிளுண்மரபு. )

விலங்கிளுண்பெயர்—கடுவன் - மா - ஒருத்தல் - போத்து - கலை - தகர் - களிறு - சேவல் - பகடு - உம்பல் - ஏறு - ஓரி. ஆக யஉ.
கடுவனென்னும்பெயர்—குரங்கு - பூனை. ஆகியவிரண்டிற்குமாம். ] மாவென்னும்பெயர்—யானை - பன்றி - புரவி. ஆக ௩-ம்.

ஒருத்தலென்னும்பெயர்—கரடி - புல்வாய் - மான் - யானை - கவரி - எருமை - பன்றி - புலி - மரை. ஆக கூ-ம். ] போத்தென்னும்பெயர்—மரை - பசு - புலி - பூனை - புல்வாய். ஆக ரு-ம்.
கலையென்னும்பெயர்—முசு - மான். ஆக உ-ம்.

தகரென்னும்பெயர்—துருவாடு - வேழம்-யாளி சுறு. ஆக ச-ம்.
களிறென்னும்பெயர்—கரி - சுறவு - பன்றி. ஆக ௩-ம்.] சேவலென்னும்பெயர்—கோழி - அன்னம். ஆக உ-ம். ] பகடென்னும் பெயர்—எருமை - யானை - பெற்றம். ஆக ௩-ம்.
உம்பலென்னும்பெயர்—இபம். } (க-ம்.

ஏறென்னும்பெயர்—ஆன் - எருமை - பன்றி - கவரி - சங்கு - மான் - மரை - புல்வாய் - சுறவு. ஆக கூ-ம்.
ஓரியென்னும்பெயர்—நரி - முசு. ஆக உ-ம்.

( விலங்கின்பெண்மரபு. )

விலங்கின்பெண்பாற்பெயர்—பிடி - பிணை - பெட்டை - மந்தி - பிணா - ஆன் - நாகு - பாட்டி. ஆக அ. ] பிடியென்னும்பெயர்—குஞ்சரம் - கவரி - ஒட்டகம். ஆக ௩-ம். ] பிணையென்னும்பெயர்— உழை - புல்வாய் - நாய் - வராகம். ஆக ச-ம்.

பெட்டையென்னும்பெயர்—ஒட்டகம் - கழுதை - வாசி - சிங்கம் - மரை. ஆக ரு-ம்.] மந்தியென்னும்பெயர்—முசு - ஊகம் - குரங்கு. ஆக ௩-ம்.] பிணாவென்னும்பெயர்—புல்வாய் - நாய் - பன்றி. ஆக ௩-ம்.] ஆனென்னும்பெயர்—எருமை - பெற்றம் மரை. ஆக ௩-ம்.
நாகென்னும்பெயர்—எருமை - மரை - பெற்றம் - ஏற்றநீர்ச்சாதி. ஆக ச-ம்.] பாட்டியென்னும்பெயர்—நரி - பன்றி - நாய். ஆக ௩-ம். ] பிணாப்பெண்ணென்னும்பெயர்கள் - பெண்பாலெவற்றிற்குமாம். ] ஆணென்னும்பெயர் ஆண்பாலெவற்றிற்குமாம்.

பறழ்பிள்ளைகுழவிகுட்டிபார்ப்பொடுகுருளைகன்று
மறியேபோதகமிவ்வொன்பான்வல்விலங்கின்பிள்ளைப்பேர்
பறழொடுகுருளைகுட்டிபற்றியமூன்றுபேரு
முறுபுலிமுயல்வராகமோதியநரிநாயாமே. (௩௭)

மூறுகுநாயன்றிமற்றைமொழிந்திடும்பிள்ளையென்ப
மறியென்பதாடழுங்குமானொடுகுதிரைவைக்கும்
பறழ்பிள்ளைகுழவிகுட்டிபார்ப்பெனவைந்துபேருங்
குறியுளகுரங்கேயாதிகோட்டில்வாழ்விலங்கின்பிள்ளை. (௩௮)

கடமைமானெருமைபெற்றங்கவயமொட்டகமேயானை
விடுபரிமகராமேமேவியகவரிகன்றுங்
கடமைமானெருமையானைகாட்டியகுழவியாகு
மடுபுலிசிங்கம்பானையானபோதகமென்றுமே. (௩௯)

முறுகியகீரிபூனைமுயலணிலென்பநான்கும்
பறழொடுகுட்டிபிள்ளைபன்னிமூன்றுமாகும்
பறழொடுகுட்டிதானேபாக்கனுமணிலுமென்ப [ (௪௰)
பறழ்பிள்ளையிரண்டுஞ்சொல்லிற்பார்ப்பொடுதவழ்சாதிப்பேர்.

குருளையுங்கன்றுமானிற்கொள்ளுபகுழவியோடு
குருளையும்யாளிகொள்ளுங்குழவியேமுசுவினுக்குங்
குருளையேமுசுவின்கூற்றுங்கூறியமாவேமானே
மிருகமேகுரங்கேநான்கும்விலங்கினிற்பொதுப்பேராமே. (௪௧)

சாலமேவியூகம்யூதஞ்சாற்றியகுலம்விருந்தங்
கோலமார்கணம்விலங்கின்கூட்டமாம்பிறவுமேற்குங்
கூலம்வேசகமேதோகைகுறித்திடுமிலாங்கூலம்வால்
வாலதியென்றும்பேராம்வாலின்கீழ்வெருக்மாமே. (௪௨)

மருப்பொடுசிருங்கங்கோடுமற்றையவுலவைகொம்பாங்
குருத்திடும்விசாணமும்பேர்குமரங்கொம்பிலாவிலங்காங்
கிருத்திமம்புறணிபோர்வைகிளரதளொலியறுக்குத்
துருத்தியேசருமம்பச்சைதுவக்குரிவடகந்தோலாம். (௪௩)

(விலங்கின்பிள்ளைமரபு.)

விலங்கின்பிள்ளைப்பெயர்—பறழ் - பிள்ளை - குழவி - குட்டி - பார்ப்பு - குருளை - கன்று - மறி - போதகம். ஆ௲௯.
பறழ் குருளை குட்டியென்னும்பெயர்கள்—புலி - முயல் - வராகம் - நரி - நாய். ஆ ரு ம்.

பிள்ளையென்னும்பெயர்—நாயொழிந்தவற்றிற்காம். ] மறியென்னும்பெயர்—ஆடு - அழுங்கு - மான் - குதிரை. ஆ ச ம்.
பறழ் பிள்ளை குழவி குட்டி பார்ப்பென்னும்பெயர்கள்—குரங்குமுதன்மரக்கோட்டில்வாழ்விலங்கின்பிள்ளைகட்காம்.

கன்றென்னும்பெயர்—கடமை - மான் - எருமை - பெற்றம் - கவயம் ஒட்டகம் - யானை - பரி - மரை - கராம் - கவரி. ஆ௰க - ம். குழவியென்னும்பெயர்—கடமை - மான் - எருமை - யானை. ஆ ச - ம்.
போதகமென்னும்பெயர்—புலி - சிங்கம் - யானை. ஆ ௩ - ம்.

பறழ் குட்டி பிள்ளையென்னும்பெயர்கள்—கீரி - பூனை - முயல் அணில். ஆ ச - ம். ] பறழ் குட்டியென்னும்பெயர்கள்—பாக்கன் - அணில். ஆ உ - ம். ] பறழ் பிள்ளையென்னும்பெயர்கள்—பார்ப்பு - தவழ்சாதி. ஆ உ - ம்.

குருளை கன்றென்னும்பெயர்கள்—ஆன். (க - ம். ] குழவி குருளையென்னும்பெயர்கள்—யாளி. (க - ம். ] குழவி குருளையென்னும்பெயர்கள்—முசு. (க - ம். ] (மரபுமுற்றிற்று) ] விலங்கின்பொதுப்பெயர்—மா - மான் - மிருகம் - குரங்கு. ஆ ச.

விலங்கின்கூட்டத்தின்பெயர்—சாலம் - வியூகம் - யூதம் - குலம் - விருந்தம் - கணம். ஆ சு. ] விலங்கின்வாலின்பெயர்—கூலம் - வேசகம் - தோகை - இலாங்கூலம் - வாலதி. ஆ ரு.
விலங்கின்வாற்கீழிடத்தின்பெயர்—வெருகம். (க)

விலங்கின்கொம்பின்பெயர்—மருப்பு - சிருங்கம் - கோடு - உலவை - விசாணம். ஆ ரு. ] கொம்பிலாவிலங்கின்பெயர்—குமரம். (க)
தோலின்பெயர்—கிருத்திமம் - புறணி - போர்வை - அதள் - ஒலியல் - தொக்கு - திருத்தி - சருமம் - பச்சை - துவக்கு - உரி - வடகம். ஆ௰உ.

தசைபுலால்புலவுபுண்ணே தடியொடுபுளிதந்துவே
பிசிதம் வள்ளூரம்விடக்குப்பேசிலூனின்பேர்பத்தாம்
பொசிதருமுடையேயூழ்த்தல்பூதியேதசைபுலாலாம்
பசுவினதிறைச்சிதானேபகர்ந்தவள்ளூரமதாமே. (௪௪)

எருவையேநெய்த்தோர்சோரியிரத்தஞ்செந்நீரோபுண்ணீர்
குருதிசெம்பால்புலானீர்குறித்தசோணிதத்திரேடு
கருதியசுடுவன்பற்றைக்கறையீராறுதிரத்தின்பேர்
விரவியநிணங்கொழுப்புவிளரொடுவிழுக்குமாமே. (௪௫)

கருவொடுசினைபீள்சூல்கருப்பமேவயாவுமாகு
மருவியவழும்பினும்வழுக்கென்பவீருளீரல்
கருதியமுடையினுமங்காட்டியபுலவோர்பீத்தை
யுருவியமலமேமாசேயுபமலமுள்ளின்மாசாம். (௪௬)

அரவுகட்செவியேபோகியகியரிவியாளஞ்சர்ப்ப
முரகம்பந்நகமேநாகமுற்றமாசுணமேசக்கிரி
பரவியபுயங்கம்பாந்தள்பணிமூவைந்திவைபாம்பின்பே
ரினாகொளுந்துண்டஞ்சாரையிராசிலமென்பதும்பேர். (௪௭)

விடமுமிழ்மண்டலிக்குமேவுகோளகமேநாமங்
கொடியமாலுதாநனேகண்குத்திப்பாம்பென்றுகூறு
நெடியமாசுணமேபாந்தணீள்பெரும்பாம்பினும
முடியவேயெழுந்துசீறுமூர்க்கனேநாகமென்ப. (௪௮)

வருகருவழலையின்பேரிராசமாநாகமாகுங்
குராவியபறவைநாகங்குக்குடசர்ப்பமென்ப
பரவியபடம்பணம்பைபடப்பொறியுத்திதுத்தி
கருதியதட்டநஞ்சுகாலும்பல்லதட்டங்காற்றும். (௪௯)

எகினமோதிமமராளம்விகங்கம்வக்கிராங்கமன்னஞ்
சிகியொடுஞமலிதோகைசிகாவளஞ்சிகண்டிமஞ்ஞை
யொகரமேமயூரமற்றுமுறுபிணிமுகங்கலாபி
மகிழ்வுறுநவிரம்பீலிகேகயமயில்பன்முப்பேர். (௫௰)

ஊனின்பெயர்—தசை-புலால்-புலவு-புண்-தடி - புளிதம்- தூ - பிசிதம் - வள்ளூரம் - விடக்கு. ஆ ௰.
புலாலின்பெயர்—முடை - ஊழ்த்தல் - பூதி - தசை. ஆ ௪.
பசுவினிறைச்சியின்பெயர்—வள்ளூரம். (௧)

உதிரத்தின்பெயர்—எருவை - நெய்த்தோர் - சோரி - இரத்தம் - செந்நீர் - புண்ணீர் - குருதி - செம்பால் - புலாணீர் - சோணிதம் - சுடுவன் - கறை. ஆ ௰௨.
கொழுப்பின்பெயர்—நிணம் - விளர் - விழுக்கு. ஆ ௩.

கருப்பத்தின்பெயர்—கரு - சினை - பீள் - சூல் - வயாவு. ஆ ௫.
வழும்பின்பெயர்—வழுக்கு. (௧)] ஈரலின்பெயர்—ஈருள். (௧)
முடையின்பெயர்—புலவு-ஊத்தை. ஆ ௨.]மாசின்பெயர்—மலம். (௧)]உண்மாசின்பெயர்—உபமலம். (௧)

பாம்பின்பெயர்—அரவு - கட்செவி - போகி - அகி - அரி - வியாளம் - சர்ப்பம் - உரகம் - பந்நகம் - நாகம் - மாசுணம் - சக்கிரி - புயங்கம் - பாந்தள் - பணி. ஆ ௰௫.
சாரைப்பாம்பின்பெயர்—துண்டம் - இராசிலம். ஆ ௨.

மண்டலிப்பாம்பின்பெயர்—கோளகம். (௧)
கண்குத்திப்பாம்பின்பெயர்—மாலுதாநன். (௧)
பெரும்பாம்பின்பெயர்—மாசுணம் - பாந்தள். ஆ ௨.
நாகத்தின்பெயர்—மூர்க்கன். (௧)

கருவழலைப்பாம்பின்பெயர்—இராசமாநாகம். (௧)]பறவைநாகத்தின்பெயர்—குக்குடசர்ப்பம். (௧)] பாம்பின்படத்தின்பெயர்—பணம்-பை. ஆ ௨.] படப்பொறியின்பெயர்—உத்தி - துத்தி. ஆ ௨. ]பாம்பினச்சுப்பல்லின்பெயர்—தட்டம். (௧)]பாம்புயிர்ப்பின்பெயர்—அதட்டம். (௧)

அன்னத்தின்பெயர்—எகினம் - ஓதிமம் - மராளம் - விகங்கம் - வக்கிராங்கம். ஆ ௫. ] மயிலின்பெயர்—சிகி - ஞமலி-தோகை-சிதர்வளம் - சிகண்டி - மஞ்ஞை - ஏகரம் - மயூரம - பிணிமுகம் - கலாபி - நவிரம் - பீலி - கேகயம். ஆ ௰௩.

சீரணமேசிகண்டங்கூந்தல்சந்திரகங்கலாபங்கூழை
பெருகியதோகைதொங்கல்பீலியாந்தூவியும்பேர்
மருவியவகவலான்மயிற்குரலேங்கலும்பேர்
வருமுருந்திறகின்முள்ளாமற்றன்னச்சிறகுதூவி. (௫௧)

மன்னியகலுழன்மற்றைவைநதேனவைநதேயன்
பந்நகவைரியோடுதார்க்கியன்பறவைவேந்த
னுன்னியகருடனுமமுவணமுமதற்கேகூறுஞ்
சொன்னசாதகப்புட்டானேசூழ்ந்தசாரங்கமென்ப. (௫௨)

சிம்புள்வாருண்டமற்றைச்செப்பியவருடையோடு
சம்பரந்துரோணம்வெய்யசர்பமெண்காற்புட்பேராம்
வெம்பியநேமிப்புள்ளுவிரும்புசக்கரவாகப்புட்
கொம்பியகோகம்யானைக்குருகென்றுகூறலாமே. (௫௩)

இருந்தபுண்டரமேகங்கமெருவையேப்வணையோடு
கருஞ்சிறையுவண்மைந்துங்கூழ்கென்பசகுந்தமும்பேர்
திருந்தியசேநம்பாரசிலீபாறுசேருங்கங்கம்
பருந்தின்பேரசுணமாவேவபகரிற்கேகயமென்றோதும். (௫௪)

சீருவேப்ரியேவந்நிதத்தையேசுகமேகிள்ளை
கீரமேசுவாகதந்தான்கிளியவந்திகையுமாகுங்
கீரமுங்கிள்ளைதானுங்கிளர்கருங்கிளியினமஞ்
சாரமாநிலாமுகிப்பேர்சகோரஞ்செம்போத்துக்குக்கில். (௫௫)

கோகிலங்களகண்டம்மேகோரங்கைகுயிலின்பேர்தா
னாகுமேபிகத்தினோடுபரபுட்டந்தானும்பேர்
கூகையுமுலூகமும்பேர்க்குடிஞையுங்குராலுங்கோட்டா
னுங்கண்வாய்ப்புட்பூணவநவிற்றுஞ்சீரிளையுமாமே. (௫௬)

கஞ்சநங்கிகிணியோடுவயவனேகஞ்சரீடம்
கிஞ்சுபாரத்துவாசம்வலியனைவிதித்தபேரே
வஞ்சுளன்வயவன்மற்றைவயாவெனன்பகாரிப்பிள்ளை
கஞ்சநங்கய்வாயென்பகரிக்குருவிப்பேர்தானே. (௫௭)

மயிற்பீலியின் பெயர்—சரணம் - சிகண்டம் - கூந்தல் - சந்திரகம் - கலாபம் - கூழை - தோகை - தொங்கல் - தூவி. ஆக கூ.
மயிற்குாலின் பெயர்—அகவல் - ஆலல் - எங்கல். ஆக ரூ.] இறகின் முள்ளின் பெயர்—முருந்து. (க)] அன்னச்சிறகின் பெயர்—தூவி (க)

கருடன் பெயர்—கலுழன் - வைநன் - வைநதேயன் - பந்நகவைரி - தார்க்கியன் - பறவைவேந்தன் - உவணம். ஆக எ.
சாதகப்புள்ளின் பெயர்—சாரங்கம். (க)

ஏண்காற்புள்ளின் பெயர்—சிம்புள் - வாருண்டம் - வருடை - சம்பரம் - துரோணம் - சரபம். ஆக சு.
யானைக்குருகின் பெயர்—நேமிப்புள் - சக்கரவாகப்புள் - கோகம். ஆக ரூ.

கழுகின் பெயர்—புண்டரம் - கங்கம் - - எருவை - பவனை - உவணம் - சகுந்தம். ஆக கா.
பருந்தின் பெயர்—சேநம் - பாரசிவை - பாறு - கங்கம். ஆக ச.
அசுணமாவின் பெயர்—கேகயம். (க)

கிளியின் பெயர்—சாரு - அரி - வந்தி - தத்தை - சுகம் - கிள்ளை - கீரம் - சுவாகதம் - அவந்திகை. ஆக கூ.] கருங்கிளியின் பெயர்—கீரம் - கிள்ளை. ஆக உ.] நிலாமுகியின் பெயர்—சகோரம். (க)
செம்போத்தின் பெயர்—குக்கில். (க)

குயிலின் பெயர்—கோகிலம் - களகண்டம் - கோரகை - பிகம் - பரபுட்டம். ஆக ரு.] கோட்டான் பெயர்—கூகை - உலூகம் - குடிஞை - குரால். ஆக சு.
நாகணவாய்ப்புள்ளின் பெயர்—பூவை - சாரிகை. ஆக உ.

வலியன் பெயர்—கஞ்சநம் - கிகிணி - வயவன் - கஞ்சரீடம் - பாரத்துவாசம். ஆக ரு.
காரிப்பிள்ளையின் பெயர்—வஞ்சுளன் - வயவன் - வயான். ஆக ரு.
சசிக்குருவியின் பெயர்—கஞ்சநம் - கயவாய். ஆக உ.

சால்கவுதம்பொன்வாய்ப்புட்டித்திரிசிச்சிலிப்பேர்
கருதியபெரும்புள்ளோடுகௌசிகமூமன் கூகை
குருகுகாலாயுதம்போர்க்குக்குடமாண்டலைப்புட்
பெருகுவாரணமென்றைந்தும்பேசிய்கோழியாமே. (௫௮)

குலிங்கமேசடகமேயூர்க்குருவியாம்புலிங்கமும்பேர்
நிலங்குபூழாங்காதம்பநெடியகானங்கோழிப்பேர்
கலிங்கமேகம்புள்வானம்பாடியாங்குறும்பூழ்காடை
யிலங்குகோரசமேபுல்லோடிதல்சிவலிவைமுப்பேரோ. (௫௯)

சாவமேகவுதாரிப்பேர்சில்லையேபகண்டையாகு
மருவியசலாங்குதானேவாய்த்தபொய்யாப்புள்ளாமே
காடம்வாயசமரிட்டங்கரும்பிள்ளைகொடியேகாக
மிருடிபிங்கலையேயாந்தைகிந்நாமென்பதும்பேர். (௬௰)

கரும்புறாவின்பேர்பாராவதமென்பகபோதமும்பேர்
பொருந்துதாதுணங்கபோதங்களரவம்புறாப்பொதுப்பேர்
பரிந்துகான்மேயுங்காளபதமேமாடப்புறாவாந்
திருந்தியவுள்ளலுள்ளான்சிதகந்தூக்கணங்குரீஇயே. (௬௧)

கருதியகம்புள்சம்பங்கோழியாங்கவுஞ்சமன்றில்
குருகுவண்டானமென்பகொய்யடிநாரையின்பேர்
பெருகியபிதாவேபோதாப்பெருநாரைசிகரியொன்றே
கருநிறநாரைவெள்ளைநாரைசாரசமென்றுமே. (௬௨)

மன்னுநீர்க்காக்கையர்க்கமற்றுங்காரண்டமும்பேர்
பன்னியகுரண்டங்கொக்காம்வலாகமுங்குமுமப்பே
ருன்னமேகிராமமற்றையுற்குரோசத்தினோடு
கிந்நரமின்னநீரிற்கிளர்ந்தெழுபறவையாமே. (௬௩)

அரியளிஞிமிறுமந்தியறுபதஞ்சிலீமுகஞ்சஞ்
சரிகமேசரகமேசஞ்சாளிகஞ்சுரும்புகீடம்
பிரமரமாவேகீதம்பிருங்கமேபிரசம்புள்ளு
வரிகொள்புண்டரிகந்தும்பிமதுபநாலந்தும்வண்டாம். (௬௪)

சிச்சிலியின்பெயர்—சிரல் - கவுதம் - பொன்வாய்ப்புள் - தித்திரி. ஆ ௪.] கூகையின்பெயர்—பெரும்புள் - கௌசிகம் - ஊமன். ஆ ௩.] கோழியின்பெயர்—குருகு - காலாயுதம் - குக்குடம் - ஆண்டலைப்புள் - வாரணம். ஆ ரு.

ஊர்க்குருவியின்பெயர்—குலிங்கம் - சடகம் - புலிங்கம். ஆ ௩. நிலங்கின்பெயர்—பூழ். (௧)] கானங்கோழியின்பெயர்—காதம்பம் (௧)] வான்மப்பாடியின்பெயர்—கலிங்கம் - கம்புள். ஆ ௨. காடையின்பெயர்—குறும்பூழ். (௧)]சிவலின்பெயர்—கோரசம் - புல் - இதல். ஆ ௩.

கவுதாரியின்பெயர்—சிரவம். (௧)] பகன்றையின்பெயர்—சில்லை. (௧)] பொய்யாப்புள்ளின்பெயர்—சலாங்கு. (௧] காகத்தின்பெயர்—கரடம் - வாயசம் - அரிட்டம் - கரும்பிள்ளை - கொடி. ஆ ரு.] ஆந்தையின்பெயர்—இருடி - பிங்கலை - கிந்நரம். ஆ ௩.

கரும்புறவின்பெயர்—பாராவதம் - கபோதம். ஆ ௨.] புறப்பொதுவின்பெயர்—தூதுணம் - கபோதம் - களரவம். ஆ ௩. மாடப்புறவின்பெயர்—காளபதம். (௧)] உள்ளான்பெயர்—உள்ளல். (௧)] தூக்கணங்குருவியின்பெயர்—சிதகம். (௧)

சம்பங்கோழியின்பெயர்—கம்புள். (௧)] அன்றிலின்பெயர்—கவுஞ்சம். (௧] கொய்யடிநாரையின்பெயர்—குருகு - வண்டானம். ஆ ௨.] பெருநாரையின்பெயர்—பிதா - போதா. ஆ ௨.]கருநாரையின்பெயர்—சிகரி. (௧)] வெள்ளைநாரையின்பெயர்—சாரசம். (௧)

நீர்க்காக்கையின்பெயர்—அர்க்கம் - காரண்டம். ஆ ௨. கொக்கின்பெயர்—குரண்டம் - வலாகம் - பகம். ஆ ௩. நீர்வாழ்பறவையின்பெயர்—உன்னம் - கிரௌஞ்சம் - உற்குரோசம் - கிந்நரம். ஆ ௪.

வண்டின்பெயர்—அரி - அளி - ஞிமிறு - மந்தி - அறுபதம் - சிலீமுகம் - சஞ்சரிகம் - சரகம் - சஞ்சாளிகம் - சுரும்பு - கீடம் - பிரமரம் - மா - கீதம் - பிருங்கம் - பிரசம் - புள் - புண்டரிகம் - தும்பி - மதுபம். ஆ ௨௰.

கரும்புளேகேசவந்தேன்கண்டபெண்வண்டினமுஞ்
சுரும்பொடுமதுகரங்கள்சொற்றிடுந்தும்பியாண்பேர்
அருஞ்சிலாலாலமென்பசோர்விலஞ்சலிகைவாவ
றருங்கோபமீபன்மூதாச்சரகமேம்பிரசந்தேனீ. (௬௫)

சிதடிசில்லிகையேசில்லைசிள்வீடுசிமிலியும்பேர்
பதமுறுசலபம்விட்டிற்பறவையாம்பதங்கமும்பேர்
விதமுறுநுளம்புதானேநிலத்திமின்மினிகச்சோதங்
கொதுகின்பேர்மசகந்துள்ளல்கூறின்மற்றசவலும்பேர். (௬௬)

மயிலெல்ழாலல்லாப்புள்ளின்வருத்தவாண்சேவலென்ப
மயிலெலழாலெல்லுமிரண்டில்வாய்த்தவாண்போத்ததாகு
மயர்வுறுகோழிகூகையல்லாப்பெண்ணளகென்றோதார் [ (௬௭)
பெயர்பெறுமெல்லாப்புள்ளின்பெண்பெடைபெட்டைபேடை.

விகங்கமாசுகியேவீயேவிகிரமேகுடிஞைபக்கி
சகுந்தம்பத்திரிபதங்கந்தாழ்[illegible]ணிமுகத்தினோடு
பகர்ந்திடுங்ககமேகோ[illegible]ப்பறவையேபதகம்போகில்
புகழ்ந்திடுகுரீஇமூணைந்தும்புட்பொதுவஃயானமும்பேர். (௬௮)

சிறகொடுசதநம்வாசஞ்சிறைபிஞ்சங்கூரல்பக்கம்
பறைசதந்தூவிதோகைபத்திரங்கூரலேகூழை
யிறையெனவுரைத்தமூவைந்தேற்றமிறகின்பேரோ
யறைதருமரிட்டங்கோசமண்டமேசினைபேமுட்டை, (௬௯)

பிள்ளையும்பார்ப்புங்குஞ்சின்பேர்சுச்சுச்சுவவுதுண்டம்
மொள்ளியவலகுமூக்காமோசனிக்கின்றதென்ப
புள்ளெழச்சிறகடித்துப்புடைத்தலினுமமாகுந்
துள்ளுபுள்ளீட்டத்தோகைதுழனியாந்தொழுதிகூட்டம். (௭௰)

கலைசுறுமீனேறென்பகாட்டியமகரமாகுஞ்
செலமுறுயானைமீனேதிமில்பெருமீனினும
மலைவுறுதிமிங்கிலப்பேரானையைவிழுங்குமீனு
மலைதிமிங்கிலகிலந்தான்மற்றதைவிழுங்குமீனே. (௭௧)

பெண்வண்டின்பெயர்—கரும்புள் - கேசவம் - தேன். ஆ௳ ௩.
ஆண்வண்டின்பெயர்—சுரும்பு - மதுகரம் - தும்பி. ஆ௳ ௩.
துருஞ்சிலின்பெயர்—ஆலாலம். (க)] வாவலின்பெயர்—அஞ்சலிகை. (க)] இந்திரகோபத்தின்பெயர்—ஈயல் - மூதா. ஆ௳ உ.
தேனீயின்பெயர்—சரகம் - பிரசம். ஆ௳ உ.

சிள்வீட்டின்பெயர்—சிதடி - சில்லிகை - சில்லை - சிமிலி. ஆ௳ ச.
விட்டிற்பறவையின்பெயர்—சலபம் - பதங்கம். ஆ௳ உ.
நுளம்பின்பெயர்—நிலத்தி. (க)] மின்மினியின்பெயர்—கச்சோதம். (க)] கொசுகின்பெயர்—மசகம் - துள்ளல் - அசவல். ஆ௳ ௩.

மயிலும் எழாலுமல்லனவாகியபுள்ளினாண்பெயர்—சேவல். (க)
மயில் எழாலெனுமிாண்டினாண்பெயர்—போத்து. (க)
கோழிகூகைகளின்பெண்பெயர்—அளகு. (க)] பறவைப்பெண்ணின்பெயர்—பெடை - பெட்டை - பேடை. ஆ௳ ௩.

புட்பொதுவின்பெயர்—விகங்கம் - ஆசுகி - வீ - விகிரம் - குடிஞை - பக்கி - சகுந்தம் - பத்திரி - பதங்கம் - பிணிமுகம் - ககம் - பறவை - பதகம் - போகில் - குரீஇ. வயானம். ஆ௳ ய௬.

இறகின்பெயர்—சிறகு - சதநம் - வாசம் - சிறை - பிஞ்சம் - கூழல் - பக்கம் - பறை - சதம் - தூவி - தோகை - பத்திரம் - குரல் - கூழை - இறை. ஆ௳ யடு. ] முட்டையின்பெயர்—அரிட்டம் - கோசம் - அண்டம் - சினை. ஆ௳ ச.

பறவைக்குஞ்சின்பெயர்—பிள்ளை - பார்ப்பு. ஆ௳ உ. ] பறவைமூக்கின்பெயர்—சுச்சு - சுவவு - துண்டம் அலகு. ஆ௳ ச.
புட்சிறகடித்துப்புடைத்தலின்பெயர்—ஓசனித்தல். (க)] புள்ளீட்டத்திரைசையின்பெயர்—துழனி. (க)] பறவைக்கூட்டத்தின்பெயர்—தொழுதி. (க)

மகரமீனின்பெயர்—கலை - சுறு - மீனேறு. ஆ௳ ௩.
பெருமீனின்பெயர்—யானைமீன் - திமில். ஆ௳ உ.
யானைமீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலம். (க)] அம்மீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலகிலம். (க)

நலந்தருநந்துசுத்திநாகொடுவளைசம்புக்கோ
டிலங்கியவாரணம்வண்டிடம்புரிவெள்ளைசங்காம்
வலம்புரிநாமந்தானேவைத்தகொக்கணையென்றோதுஞ்
சலஞ்சலம்பணிலமென்றுசாற்றினரோற்றநூலோர். (௭௨)

இப்பியாயிரமேசூழ்ந்ததிடம்புரியென்றுகூறு
மொப்பில்சங்காயிரஞ்சூழுறும்வலம்புரியென்றோது
மப்படியதுவுஞ்சூழ்ந்தசலஞ்சலமாகுமற்றைத்
தப்பிலாச்சலஞ்சலங்கள்சார்ந்ததுபாஞ்சசந்நியம். (௭௩)

இடங்கர்சிஞ்சுமாரம்வன்மீனெழிற்கராமுதலையின்பேர்
கொடுந்திறற்கராமற்றொண்பேர்கூர்மமேயுறுப்படக்கி
யொடுங்குகச்சபமேயாமைகமடமுமுணைக்கற்பார்று
மடங்கியதுளிபெண்ணாமைமலங்கின்பேர்நூழையென்ப. (௭௪)

ஏரலோடெருந்தேயூல்கிளிஞ்சிலாமிறவிறான்மீ
னாரலேயாராலின்பேர்கெண்டைமீன்சபரஞ்சேலா
மூர்தருநந்தாநத்தைநாகுமாமுருவேயட்டை
நீருறுமயிலைமற்சநெடும்புழன்மீன்பொதுப்பேர். (௭௫)

புள்ளியேகெவுளிபல்லிபோற்றுங்கோகிலமுமப்பேர்
நொள்ளைநாகரவண்டின்பேருலாதையேநோன்சிலம்பி
யொள்ளியபிலஞ்சுலோபம்பிபீலிகையூமொழும்பாந்
தெள்ளுநாங்கூழ்பூநாகஞ்சிதலையேகறையான்செல்லே. (௭௬)

நளிவிடந்தெறுக்காறுட்டனுட்டியவிருச்சிகந்தேள்
களவனேகுளிரோநள்ளிகவைத்தாள்கர்க்கடகஞெண்டே
யுளுவுசுவாகுமென்பவுற்றமண்டூகந்தேரை
தளரரிநுணலைநீகந்தவளையாம்பேகமும்பேர். (௭௭)

கிருமியேபுழுப்பொட்டும்பேர்கீடங்கோற்புழுவலண்டாம்
பிரசங்கோற்றேனிறாலேபேசியதேனின்கூடாம்
விரவியவிலங்கினீட்டம்விருத்தமோரெழுபத்தெட்டும்
வருமுறையுரைத்தான்வீரைமன்னன்மண்டலவன்றானே. (௭௮)

மூன்றாவதுவிலங்கின்பெயர்த்தொகுதி
முற்றிற்றுமுற்றும்.

சங்கின்பெயர்—நந்து - சுத்தி - நாகு - வளை - கம்பு - கோடு - வாரணம் - வண்டு - இடம்புரி - வெள்ளை. ஆக ௰.
வலம்புரிச்சங்கின்பெயர்—கொக்கணை. (க)
சலஞ்சலத்தின்பெயர்—பணிலம். (க)

இடம்புரி—இப்பியாயிரஞ்சூழ்ந்தது.
வலம்புரி—இடம்புரிச்சங்காயிரஞ்சூழ்ந்தது.
சலஞ்சலம்—வலம்புரியாயிரஞ்சூழ்ந்தன.
பாஞ்சசந்நியம்—சலஞ்சலங்களாயிரஞ்சூழ்ந்தது.

முதலையின்பெயர்—இடங்கர் - சிஞ்சுமாரம் - வன்மீன் - கராம் - ஆக ௪.] ஆண்முதலையின்பெயர்—கராம். (க)] ஆமையின்பெயர்—கூர்மம் - உறுப்படக்கி கச்சபம் - கமடம். ஆக ௪.] பெண்ணாமையின்பெயர்—துளி. (க)] மலங்கின்பெயர்—நாரை. (க)

கிளிஞ்சிலின்பெயர்—ஏரல் - ஏருந்து - ஊரல். ஆக ௩.] இறான்மீனின்பெயர்—இறவு. (க)] ஆரான்மீனின்பெயர்—ஆரல். (க)] கெண்டைமீனின்பெயர்—சபரம் - சேல். ஆக ௨.] நத்தையின்பெயர்—நந்து - நாகு. ஆக ௨.] அட்டையின்பெயர்—உரு. (க)] மீன்பொதுப்பெயர்—மயிலை - மற்சம் - புழல். ஆக ௩.

பல்லியின்பெயர்—புள்ளி - கெவுளி - கோகிலம். ஆக ௩.] நாகரவண்டின்பெயர்—தொள்ளை. (க)] சிலம்பியின்பெயர்—உலூதை. (க)] எறும்பின்பெயர்—பிலஞ்சுலோபம் - பிபீலிகை. ஆக ௨. நாங்கூழின்பெயர்—பூநாகம். (க)] செல்லின்பெயர்—சிதலை - கறையான். ஆக ௨.

தேளின்பெயர்—நளிவிடம் - தெறுக்கால் - துட்டன் - விருச்சிகம். ஆக ௪.] ஞெண்டின்பெயர்—களவன் - குளிர் - நள்ளி - கவைத்தாள் - கூர்ங்கிடம். ஆக ௫.] உழுவின்பெயர்—உசு. (க)] தவளையின்பெயர்—மண்டூகம் - தேரை - அரி - நுணலை - நீகம் - பேகம். ஆக ௬.

புழுவின்பெயர்—கிருமி - பொட்டு. ஆக ௨
வண்டின்பெயர்—கீடம் - கோற்புழு. ஆக ௨
கோற்றேனின்பெயர்—பிரசம். (க)
தேன்கூட்டின்பெயர்—இறால். (க)

# நான்காவது.

## மரப்பெயர்த்தொகுதி

### காப்பு.

திருக்கிளர்தேவர்கோமானேவலிற்குபேரன்செய்த
விருப்புறுபொன்னெயிற்குள்விளங்கவெண்ணெழுத்திரண்டும்
பரப்பியவாதிமூர்த்தியங்கயப்பாதம்போற்றி
மரப்பெயர்த்தொகுதிதன்னைவருமுறைகூறலுற்றாம். (௧)



சந்தாநம்வேண்டிற்றெல்லாந் தருமரிசந்தநம்பூ
மந்தாரம்பாரிசாதங்கற்பகமற்றேருணாந்தாஞ்
சந்தாரஞ்சாந்துசாந்தஞ்சந்திராதிலகத்தோடு
வந்தேறுபடீராம்பூசுமலயசஞ்சந்தநப்பேர். (௨)

மகிழ்மக்கற்பகத்தில்வளர்கொடிகாமவல்லி
யகருவேகாகதுண்டமகிலென்பபூழிலும்பேர்
பகரும்புன்காலியோடுபாடலம்பாதிரிப்பேர்
வகுளமேமயிலஞ்சியென்பமகிழாங்கேசரமுமாமே. (௩)

மன்னியகோங்கிணமம்வருந்துருமோற்பலம்பூங்
கன்னிகாரமுமாமென்பசம்பகஞ்சண்பகப்பேர்
புன்னைபுந்நாகநாகம்வழைசுராபுன்னைப்பேரே
நன்னிறநரந்தநாரநாரங்கநாரத்தைப்பேர். (௪)

குருகுநாகரிவாசந்திமாதவிகுருக்கத்திப்பேர்
தருசிறுசண்பகப்பேர்சாதிமாலதியுமாகுங்
கருமுகைபித்திகைப்பேர்திலகமஞ்சாடிகாட்டு
மருகுதான்மகரவாணூவநமல்லிகைப்பேர்மௌவல். (௫)

மல்லிகைபுருண்டிமற்றைமாலதியநங்கமும்பே
ரல்லிபுன்காலிகாசையஞ்சநிபூவைகாயாக்
குல்லையேசெச்சைவெட்சிகொந்தார்சிந்தூரமும்பேர்
குல்லைபூந்துளவிரண்டுந்துழாய்வநமென்றுங்கூறும். (௬)

செங்கோடுபஞ்சரந்தான்செருந்தியேபொருந்திநிற்கு
மங்கோலஞ்சேவழிஞ்சில்சேமரமென்றுமாகுங்
கொங்காருந்துருக்கமென்பகுங்குமமரவமும்பே
ரங்கானவனிச்சந்தானேயருப்பலநறவஞ்சுள்ளி. (௭)

கரவீரங்கவீரமற்றைக்கணவீரமலரியின்பேர்
விரைமேவுதமநகந்தான்மேவியமருக்கொழுந்தே
யிருவேலிமூலகந்தம்வேரிபீதகமுமேற்கு
மருமேவுமிருவாட்சிக்குமயிலையுமநங்கமும்பேர். (௮)

ஐந்தருவாவன—சந்தாநம் - அரிசந்தநம் - மந்தாரம் - பாரிசாதம் - கற்பகம்.
சந்தநமரத்தின்பெயர்—சந்து - ஆரம் - சாந்து - சாந்தம் - சந்திரதிலகம் - படீரம் - மலயசம். ஆ எ.

அக்கற்பகதருவிற்படர்கொடியின்பெயர்—காமவல்லி. (க)
அகிலின்பெயர்—அகரு - காகதுண்டம் - பூழில். ஆ ரு.
பாதிரிமரத்தின்பெயர்—புன்காலி - பாடலம். ஆ உ.
மகிழமரத்தின்பெயர்—வகுளம் - இலஞ்சி - கேசரம். ஆ ரு.

கோங்குமரத்தின்பெயர்—துருமோற்பலம் - கன்னிகாரம். ஆ உ.
சண்பகமரத்தின்பெயர்—சம்பகம். (க) ] புன்னைமரத்தின்பெயர்—புந்நாகம் - நாகம். ஆ உ. ] சுரபுன்னையின்பெயர்—வழை. (க) ] நாரத்தையின்பெயர்—நரந்தம் - நாரம் - நாரங்கம். ஆ ரு.

குருக்கத்தியின்பெயர்—குருகு - நாகரி - வாசந்தி - மாதவி. ஆ ச.
சிறுசண்பகத்தின்பெயர்—சாதி - மாலதி. ஆ உ.] பித்திகையின்பெயர்—கருமுகை. (க) ]மஞ்சாடியின்பெயர்—திலகம். (க)
மகரவாழையின்பெயர்—மருகு. (க) ] வநமல்லிகையின்பெயர்—மௌவல். (க)

மல்லிகையின்பெயர்—புருண்டி - மாலதி - அநங்கம். ஆ ரு.
காயாவின்பெயர்—அல்லி - புன்காலி - காசை - அஞ்சநி - பூவை. ஆ ரு.] வெட்சியின்பெயர்—குல்லை - செச்சை - சிந்தூரம். ஆ ரு.
துழாயின்பெயர்—குல்லை - துளவு - வநம். ஆ ரு.

செருந்திமரத்தின்பெயர்—செங்கோடு - பஞ்சரம். ஆ உ.
அழிஞ்சிலின்பெயர்—அங்கோலம் - சே - சேமரம். ஆ ரு.
குங்குமமரத்தின்பெயர்—துருக்கம் - மரவம். ஆ உ.
அனிச்சமரத்தின்பெயர்—அருப்பலம் - நறவம் - சுள்ளி. ஆ ரு.

அலரியின்பெயர்—கரவீரம் - கவீரம் - கணவீரம். ஆ ரு.
மருக்கொழுந்தின்பெயர்—தமநகம். (க)
இருவேலியின்பெயர்—மூலகந்தம் - வேரி - பீதகம். ஆ ரு.
இருவாட்சியின்பெயர்—மயிலை - அநங்கம். ஆ உ.

முண்டகமுடங்கல்கைதைமுசலியேமடியேதாழை
கண்டல்கேதகையுமப்பேர்பறிவைபட்டிகையேகாட்டும்
வண்டுளர்வலம்புரிப்பேர்நந்தியாவர்த்தமென்ப
விண்டபூஞ்செவ்வரத்தமேவுமந்தாரமாமே. (௯)

தாலமேபெண்ணைபுல்லுத்தாளிபுற்பதிபனைப்பேர்
தாலமேகூந்தற்பூகந்தருகந்திபூகம்பூக்கம்
போலுமேகமுகுமுப்பேர்பொருந்தியதுவர்க்காய்பாகு
கோலமென்றிந்தமூன்றுங்குறித்தபாக்கிற்குநாமம். (௰)

பநசமேவருக்கைபாகல்பலவிவைபலாவின்பேரே
பனையவீரப்பலாவேயாசினியென்பதாகும்
வினவியமாந்திருதமேவுமாம்பிரமேகொக்கே
இனபடுமாழைமாவாஞ்சேதாரந்தேமாவின்பேர். (௰௧)

தாழைதென்னளிகேரமிலாங்கலிதாந்தெங்கின்பேர்
குழுநெய்யரிபன்னாடைசெ[illegible]ியநாரியும்பேர்
வாழையேகதலியாகுமரம்பையுமதன்பேர்
வேழமேகன்னலிக்குமென்கழைகரும்புநாற்பேர். (௰௨)

காம்புயாதிரிமுடங்கல்கழைபணைவிண்டுநேமி
தூம்புவெய்தட்டைமுந்தூழ்துளைகிளைமுளையேவேணு
வாம்பல்சீசகம்வேல்வேரலரியமைதிகிரிவேழ
மேம்படுவனமூவெட்டுமூங்கிலாம்வெதிருமப்பேர். (௰௩)

வடமுடனியக்குரோதமற்றைக்கான்மரம்வாரேங்கி
படருந்தொன்மரமேகோளிபழுமரமாலின்பேரே
குடசம்வெட்பாலையென்பகொழுங்கிரிமல்லியும்பே
ருடையென்பகுடைவேலாகுமுற்றகாஞ்சநமேபுன்கு. (௰௪)

விளாசெறிசெயலைபிண்டிமேவுகாகோளிமூன்று
மருகனெம்மானிருந்தேயறம்பகரசோகின்பேரா
மரசின்பேர்சுவலைகுஞ்சராசநமச்சுவத்தந்
திருமரம்பணையேபோதிகணவம்பிப்பிலமுஞ்செப்பும். (௰௫)

தாழையின்பெயர்—முண்டகம் - முடங்கல் - கைதை - முசலி-மடி - கண்டல் -கேதகை. ஆ எ. ] பட்டிகையின்பெயர்—பறிவை. (க) ]நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி. (ரு)
செவ்வரத்தத்தின்பெயர்—மந்தாரம். (க)

பனையின்பெயர்—தாலம் - பெண்ணை - புல் - தாளி - புற்பதி. ஆ ரு. ] கூந்தற்பூகத்தின்பெயர்—தாலம். (க)
கமுகின்பெயர்—கந்தி - பூகம் - பூக்கம். ஆ ங.
பாக்கின்பெயர்—துவர்க்காய் - பாகு - கோலம். ஆ ங.

பலாமரத்தின்பெயர்—பநசம் வருக்கை-பாகல் - பலவு. ஆ ச. ஈரப்பலாவின்பெயர்— ஆசினி. (க)]மாமரத்தின்பெயர்—மாந்தி-சூதம்-ஆம்பிரம்- கொக்கு - மாழை. ஆ ரு. ] தேமாவின்பெயர்— சேதாரம். (க)

தெங்கின்பெயர்—தாழை - தெங்கு - நாளிகேரம் - இலாங்கலி. ஆ ச. ] பன்றாடையின்பெயர்—தெய்பரி - நாரி. ஆ உ. வாழையின்பெயர்—கதலி - அரம்பை. ஆ உ.] கரும்பின்பெயர்—வேழம் - கன்னல் - இக்கு - கழை. ஆ ச.

மூங்கிலின்பெயர்—காம்பு - பாதிரி - முடங்கல் - கழை - பணை - விண்டு - நேமி - தாம்பு - வேய் - தட்டை - முந்தூழ் - துளை - கிளை - முளை - வேணு - ஆம்பல் - கீசகம்- வேல்- வேரல்- அரி- அமை - திகிரி - வேழம் - வரை - வெதிர். ஆ உரு.

ஆலமரத்தின்பெயர்—வடம் - நியக்குரோதம் - கான்மரம் தொன்மரம் -. கோளி - பழுமரம். ஆ ஙா.
வெட்பாலையின்பெயர்—குடசம் - கிரிமல்லி. ஆ உ.] குடைவேலின்பெயர்—உடை. (க)]புன்கமரத்தின்பெயர்—காஞ்சநம். (க)

அசோகமரத்தின்பெயர்—செயலை - பிண்டி - காகோளி. ஆ ங.
அரசமரத்தின்பெயர்—சுவலை - குஞ்சராசநம்- அச்சுவத்தம்- திருமரம் - பணை - போதி - கணவம் - பிப்பிலம், ஆ அ.

சிந்தகமாம்பிரஞ்சிந் தூரமேயெகின்புளிப்பேர்
திந்திருணியுமப்பேரோதேக்கின்பேர்சாகஞ்சாதி
வந்தெழுமிதழிகொன்றைமதலையுங்கடுக்கையும்பேர்
முந்துகிஞ்சுகத்திஞேடுகவிருமுண்முருக்கிஞமம். (௰சு)

சம்புநேரோடுநாவல்சாதேவங்குழிநாவற்பேர்
நிம்பமேவேம்பிஞமநீள்பிசுமந்தமும்பேர்
சம்பீரமுருகிஞேடுசதாபலமெலுமிச்சைப்பே
ரம்புவியிலிகுசத்தோடருணமுநாட்டுமப்பேர். (௰எ)

அதவுடனுதும்பரங்கள்கோளியேயதமேயத்தி
யிதமுறுமாமைசிஞ்சமெகின்மூன்றும்புளிமாவின்பேர்
வதரிகோற்கொடியிலந்தைமதித்தகுல்வலியுமப்பேர்
விதமுறுகோலங்கொண்டைவினவிலக்கனியின்பேரே. (௰அ)

மாதுளமாதுளுங்கங்கழுமுளேமாதுளேப்பேர்
தாதுமாதுளேயிஞமந்தாடிமமென்றேசாற்றுஞ்
சாதிவேத்திரமேசூல்சாந்தியபிரம்புமுப்பேர்
தாதகியாத்தியாரேசல்லகியெல்லாமொன்றும். (௰கூ)

சில்லமேயில்லந்தேற்றுஞ்சிரீடமேபாண்டில்வாகை
வில்லமாலூரமேகூவிளமிவைவில்வப்பேரே
புல்லியபசுநாவிட்டில்புக்கிவைபராயின்பேரே
பல்லிணர்க்கிலுகிலுப்பைபகன்றையாமுலவையோடை. (உ0)

குரவகமென்பவாடாக்குறிஞ்சியாங்கோரண்டந்தான்
பெருகியகுறிஞ்சியாகும்பேரீந்தின்பேர்கர்ச்சூரங்
குரவமேகோட்டமென்பமழைவண்ணக்குறிஞ்சிபாணந்
தருகரமஞ்சரிப்பேர்சாற்றுநாயுருவியாமே. (உக)

தளவுமாலதியேமௌவலூதிகைமுல்லைசாற்றுங்
களவென்பகளாவிஞமங்கதிரமேகருங்காலிப்பேர்
விளவொடுகபித்தம்வெள்ளில்விளாக்கடிப்பகையிஞேடு
விளையுமையவிசித்தார்த்தம்வெண்சிறுகடுகிம்முப்பேர். (உஉ)

புளியமரத்தின்பெயர்—சிந்தகம் - ஆம்பிராம் - சிந்தூராம் - எகின் - திந்திருணி. ஆக ௫. ]தேக்கின்பெயர்—சாகம் - சாதி. ஆக ௨.
கொன்றையின்பெயர்—இதழி - மதலை - கடுக்கை. ஆக ௩.
முண்முருக்கின்பெயர்—கிஞ்சுகம் - கவிர். ஆக ௨.

நாவலின்பெயர்—சம்பு - நேரேடு. ஆக ௨. ] குழிநாவலின்பெயர்—சாதேவம். (௧) ] வேம்பின்பெயர்—நிம்பம் - பிசுமந்தம். ஆக ௨. ]எலுமிச்சையின்பெயர்—சம்பீரம் - முருகு - சதாபலம் - இலிகுசம் - அருணம். ஆக ௫.

அத்திமரத்தின்பெயர்—அதவு - உதும்பரம் - கோளி - அதம். ஆக ௪.] புளிமாவின்பெயர்—மாழை - சிஞ்சம் - எகின். ஆக ௩.
இலந்தையின்பெயர்—வதரி - கோற்கொடி - குல்வலி. ஆக ௩.
இலந்தைக்கனியின்பெயர்—கோலம் - கொண்டை. ஆக ௨.

மாதுளையின்பெயர்—மாதுளம் - மாதுளுங்கம் - கழுமுள். ஆக ௩.
தாதுமாதுளையின்பெயர்—தாடிமம். (௧)
பிரம்பின்பெயர்—சாதி - வேத்திரம் - சூரல். ஆக ௩.
ஆத்தியின்பெயர்—தாதகி - ஆர் - சல்லகி. ஆக ௩.

தேற்றுமரத்தின்பெயர்—சில்லம் - இல்லம். ஆக ௨. ]வாகைமரத்தின்பெயர்—சிரீடம் - பாண்டில். ஆக ௨. ]வில்வமரத்தின்பெயர்—வில்லம் - மாலூரம் - கூவிளம். ஆக ௩. ]பராய்மரத்தின்பெயர்—பசுநா - விட்டில் - புக்கு. ஆக ௩. ]கிலுகிலுப்பையின்பெயர்—பகன்றை. (௧)] ஒடையின்பெயர்—உலவை. (௧)

வாடாக்குறிஞ்சியின்பெயர்—குரவகம். (௧)]குறிஞ்சியின்பெயர்—கோரண்டம். (௧)] பேரீந்தின்பெயர்—கர்ச்சூரம். (௧)] கோட்டத்தின்பெயர்—குரவம். (௧) ] மலைவண்ணக்குறிஞ்சியின்பெயர்—பாணம். (௧)] நாயுருவியின்பெயர்—கரமஞ்சரி. (௧)

முல்லையின்பெயர்—தளவு - மாலதி - மௌவல் - உளசிகை. ஆக ௪.
களாவின்பெயர்—களவு. (௧) ]கருங்காலியின்பெயர்—கதிரம். (௧)
விளாவின்பெயர்—விளவு - கபித்தம் - வெள்ளில். ஆக ௩. ]வெண்கடுகின்பெயர்—கடிப்பகை - ஐயவி - சித்தார்த்தகம். ஆக ௩.

மருதபூதரத்திஞேடுமேற்றருச்சுநமுமேற்கும்
பெருகியகணிஃபமேவங்கைபிசாரந்திமிசுமப்பேர்
திருமிகுமதாசங்கோத்தநிகைழுந்திரிகைதானே
வருமதிமதாமட்டிமதுகமேயதிங்கமென்ப. (உங)

காந்தள்செங்காந்தளாகுமிலாங்கலிதோன்றியும்பேர்
காந்துகங்கோடல்கோடைகருதுவெண்காந்தளாகும்
பூந்துணர்ப்பலாசுதானேபுனமுருக்கின்பேரொன்ப
சாய்ந்தெழுசமியேவன்னிதணக்கின்பேர்நுணவுதானே. (உச)

குந்தமேகுருந்தமென்பகுமிழ்கூம்பல்குஞ்சங்குன்றி
யிந்துளமராகதம்பமியைந்தநீபங்கடம்பாஞ்
சிந்துவாரம்நிர்க்குண்டிசெப்பில்வெண்ணொச்சியாகுந்
தந்தசத்திக்கொடிப்பேர்தாடிமஞ்சந்தாளுமே. (உரு)

அரிதகிபத்தியங்கள்கடுவேயாமலகநெல்லி
கருதியதான்றிதானேகலித்தருமந்தாருகும்
பரவுமாகதிகாமன்றிப்பலியென்பகலினியும்பே
ருருளரிசிப்பேர்கொத்துமலியெனவுரைக்கலாமே. (உசு)

கன்னிகாக்கணமிரண்டுங்கருவிளைகிணியும்பேர்
முன்னமேதுரிஞ்சிலின்பேர்மொழிந்தசிக்கிரியுமாகு
மன்னியவாடாதோடைவாசையென்றறையலாமே
பன்னல்கார்ப்பாசமின்னபருத்தியின்பெருத்தநாமம். (உஎ)

இத்தியேசுவியாத்தியாத்திரியிறலிநாற்பேர்
சித்திரமேயேரண்டஞ்சிறந்தவாமணக்குமம்
வைத்திடுமிருப்பைதானேமதுகமாங்குலிகமும்பேர்
கைத்தகோடரமேகாளங்காஞ்சிரைமுட்டியெட்டி. (உஅ)

செங்கருங்காலிநாமஞ்சிறுமாரோடந்தாறுகுந்
தங்கியசாலஞ்சுள்ளிமராமரமாவேயாச்சா
பொங்கர்சாந்மலியிஞேடுபூரணியிலவமுப்பேர்
லங்கமேவழுதலைப்பேர்வழுதுணையென்றுமாமே. (உகூ)

மருதமரத்தின்பெயர்—பூதவம் - அருச்சுநம். ஆக ௨.
வேங்கைமரத்தின்பெயர்—கணி - பிாசாரம் - திமிசு. ஆக ௫.
முந்திரிகையின்பெயர்—மதுாசம் - கோத்தநிகை. ஆக ௬.
அதிமதுாத்தின்பெயர்—அட்டி - மதுசம் - அதிங்கம். ஆக ௫.

செங்காந்தளின்பெயர்—காந்தள் - இலாங்கலி - தோன்றி. ஆக ௫.
வெண்காந்தளின்பெயர்—காந்துகம் - கோடல் - கோடை. ஆக ௫.
புனமுருக்கின்பெயர்—பலாசு. (௧)] வன்னியின்பெயர்—சமி. (௧)
தணக்கின்பெயர்—நுணவு. (௧)

குருந்தமரத்தின்பெயர்—குந்தம். (௧)] குமிழின்பெயர்—கூம்பல். (௧)] குன்றியின்பெயர்—குஞ்சம். (௧)] கடம்பின்பெயர்—இந்துளம் - மரா - கதம்பம் - நீபம். ஆக ௪.] வெண்ணொச்சியின்பெயர்—சிந்துவாரம் - நிர்க்குண்டி. ஆக ௨.] சத்திக்கொடியின்பெயர்—தாடிமஞ்சம். (௧)

கடுமரத்தின்பெயர்—அரிதகி - பத்தியம். ஆக ௨.] நெல்லியின்பெயர்—ஆமலகம். (௧)] தான்றியின்பெயர்—கலித்துருமம். (௧)
திப்பலியின்பெயர்—மாகதி - காமன் - கலிநி. ஆக ௫.
கொத்துமலியின்பெயர்—உருளரிசி. (௧)

கருவிளையின்பெயர்—கன்னி - காக்கணம் - கிகிணி. ஆக ௫.
துரிஞ்சிலின்பெயர்—முன்னம் - சீக்கிரி. ஆக ௨.
ஆடாதோடையின்பெயர்—வாசை. (௧)
பருத்தியின்பெயர்—பன்னல் - கார்ப்பாசம். ஆக ௨.

இறலியின்பெயர்—இத்தி - சுவி - இாத்தி - இாத்திரி. ஆக ௪.
ஆமணக்கின்பெயர்—சித்திரம் - ஏாண்டம். ஆக ௨.
இருப்பையின்பெயர்—மதுகம் - குலிசம். ஆக ௨.] எட்டியின்பெயர்—கோடரம் - காள்ம் - காஞ்சிரை - முட்டி. ஆக ௪.

செங்கருங்காலியின்பெயர்—சிறுமாரோடம். (௧)] ஆச்சாமரத்தின்பெயர்—சாலம் - குள்ளி - மராமரம் - ஆ. ஆக ௪.
இலவமரத்தின்பெயர்—பொங்கர் - சாற்மலி - பூரணி. ஆக ௫.
வழுதலையின்பெயர்—வங்கம் - வழுதுணை. ஆக ௨.

கழ்விருமங்கர்ச்சூங்கழற்காயேகழுங்குமற்று
முழலுமாங்கற்றழைப்பேர்முதிர்விலாக்குமரிகந்நி
யிழைவுறுபுல்லிதொடக்கியிண்டுவாமீகையீங்கை
யுழிஞையேசிறுபூளைப்பேருந்மத்தமூமத்தைப்பேர். (௫௰)

அச்சமேமுநிகரீமகத்தியாமெருக்கருக்கம்
பச்சிலைமரந்தமாலம்பசும்பிடியென்றும்பேரோ
சுச்சுவேசுண்டியென்பசமங்கையேவறட்சுண்டிப்பேர்
வச்சிராங்கங்கண்டூர்வம்வச்சிராஞ்சதுராக்கள்ளி. (௫௧)

பல்லிணர்க்குள்விதானேமலைப்பச்சைபலிநிஞாழல்
சில்லியேமேகநாதஞ்சாகிநிசிறுகீரைப்பேர்
சொல்லியசகுடஞ்சேம்பாஞ்சூழ்ந்தநாளிகமேவள்ளை
நல்லநந்தைப்பேர்கொத்தானிறுவிலியலியென்றுமே. (௫௨)

திரிபுரிசாறடைப்பேர்சிறந்தகூதளங்கூதாளி
விரவியவுருவாரந்தான்வெள்ளரிவிளங்குநாமங்
க்ருதுகக்கரிவாலுங்கிகண்டூதிகாஞ்சொறிப்பேர்
பரவுமஞ்சிகமேதாளிபகன்றையாஞ்சிவேதைதானே. (௫௩)

ஏலமாந்துடியோடாஞ்சியிரண்டுமேயிசங்கினுக்குக்
கோலுமுத்தாபலம்பேர்குண்டலியென்றுமாகுங்
கூலமேகாரவல்லிகூறியபாகலின்பேர்
பாலையின்பேர்சீவந்திசீவநியென்றும்பன்னும். (௫௪)

விம்பமேதொண்டைகொவ்வைபசிரிபாவிரிதுரோணந்
தும்பையேயலாபுமற்றைச்சுரைநாழில்கொடிக்கொத்தானுங்
கொம்பர்சேர்முருங்கையேசிக்குருவடகிலைக்கதிப்பேர்
பம்பியபீரம்பீர்க்காம்படலிகைபெரும்பீர்க்காமே. (௫௫)

பரவுபாற்சொற்றிநாமம்பாயசமென்றுகூறும்
விரவியவமுதவல்லிமேயசீவந்திசீந்தி
மருவியவிலதைவள்ளிவல்லிவண்கொடிமுப்பேராஞ்
சரவணங்காசைநாணல்சரமென்றுஞ்சாற்றலாமே. (௫௬)

கழற்கொடியின்பெயர்—கர்ச்சூரம். (க)] கழற்காயின்பெயர்—கழங்கு - முழ்ல். ஆக உ.]கற்றாழையின்பெயர்—குமரி-கந்தி. ஆக உ.]புலிதொடக்கியின்பெயர்-இண்டு. (க)]ஈங்கையின்பெயர்—ஈங்கை.(க]சிறுபூளையின்பெயர்—உழிஞை. (க)]ஊமத்தையின்பெயர்—உந்மத்தம். (க)

அகத்தியின்பெயர்—அச்சம் - முநி - கரீரம். ஆக ரு.] எருக்கின்பெயர்—அருக்கம்.(க)] பச்சிலைமரத்தின்பெயர்—தமாலம்-பசும்பிடி. ஆக உ.] சுண்டியின்பெயர்—சுச்சு. (க)] வறட்சுண்டியின்பெயர்—சமங்கை. (க)] சதுரக்கள்ளியின்பெயர்—வச்சிராங்கம்-கண்டீரவம் - வச்சிரம். ஆக ரு.

மலைப்பச்சையின்பெயர்—குளவி. (க)]ஞாழலின்பெயர்—பலிநி. (க)]சிறுசீனியின்பெயர்—சில்லி-மேகநாதம்-சாகிநி.ஆக ரு]சம்பின்பெயர்—சகுடம்.(க)]வள்ளையின்பெயர்—நாளிகம்.(க)]கொத்தான்பெயர்—நந்தை.(க]நறுவிலியின்பெயர்—அலி. (க)

சாறணையின்பெயர்—திரிபுரி. (க)] கூதாளியின்பெயர்—கூதளம்.(க)]வெள்ளரியின்பெயர்—உருவாரம்.(க)]கக்கரியின்பெயர்—வாலுங்கி. (க]காஞ்சொறியின்பெயர்—கண்டூதி. (க)] தாளியின்பெயர்—மஞ்சிகம். (க)]சிவேதையின்பெயர்—பகன்றை. (க)

ஏலத்தின்பெயர்—துடி-ஆஞ்சி. ஆக உ.]இசங்கின்பெயர்—முத்தர்பலம்-குண்டலி. ஆக உ.]பாகலின்பெயர்—கூலம் - காரவல்லி. ஆக உ.]பாலைமரத்தின்பெயர்—சீவந்தி - சீவநி. ஆக உ.

கொவ்வையின்பெயர்-விம்பம்-தொண்டை. ஆக உ.]பசிரியின்பெயர் பாவிரி. (க)]தும்பையின்பெயர்-துரோணம். (க)]சுரையின்பெயர்-அலாபு. (க)]கொடிக்கொத்தான்பெயர்-நூழில்.(க)]முருங்கையின்பெயர்-சிக்குரு.(க)]இலைக்கறியின்பெயர்-அடகு. (க) பீர்க்கின்பெயர் பீரம்.(க]பெரும்பீர்க்கின்பெயர்-படலிகை.(க)

பாற்சொற்றியின்பெயர்—பாயசம்.(க)] சிந்திக்கொடியின்பெயர்-அமுதவல்லி-சீவந்தி. ஆக உ.]கொடியின்பெயர்-இலதை-வள்ளி-வல்லி. ஆக ரு.]நாணலின்பெயர்-சரவணம் காசை-சரம். ஆக ரு.

நறியதாம்பூலவல்லிதாம்பூலிநாகவல்லி
செறிதருமிலைக்கொடிப்பேர்திரையன்மெல்லிலையுமாகுங்
கறியொடுமரீசங்காயங்கலினைகோளகந்திரங்கல்
செறிதருமிளகினுமிரியலுஞ்செப்பலாமே. (௫௭)

வரிசொல்லுவிரீகிசாலிவளர்நெல்லாம்யவமுமாகுந்
தெரியுநன்னெல்லிரேடுசெந்நெல்லுஞ்செஞ்சாலிப்பேர்
பரியும்பைங்கூழ்பசும்புல்பயிர்கதிர்குரலோடேனல்
பெருகியவிளைஞ்சுல்பீட்டைபீளிளங்கதிரின்பேரே. (௫௮)

பழுதுறுபதரின்பேரேபதடியாம்போரேசும்மை
பொழியத்தூற்றுதநெல்லின்பொலியேபொங்கழியென்றுகுந்
தழுவுகோதுமையேசோதிதண்டுலமரிசிதானே [ (௫௯)
வழுதுவைபலாலம்வைக்கோன்மலைநெல்லைவனமேவைக்கும்.

தந்தவேயரிசிதோரைகுளநெல்லுத்தாளிவாரஞ்
செந்தினைகவலைகம்பாந்தினையின்பேரெனலென்ப
பைந்தினைதானுமேனல்பகர்ந்திடுங்கருந்தினைப்பே
ரந்தமாமிறடிகங்கேயருவியுமிருவியுந்தாள். (௬௰)

துவரையாடகமேயாமஞ்சூரமேகடலையின்பே
ரவரைசிக்கடியேசிம்பையழுந்திவுழுந்துமாடங்
கவர்தருபயறுமுற்கங்காணமேகுலுத்தங்கொள்ளா
மிவையெலாமுதிரைகூலமிதைகாராமணியினுமம். (௬௧)

நண்ணியசொன்னல்சோளநறுங்கியவிறுங்குமாமே
யெண்ணொடுதிலமுநூவுமெட்கவ்வையிளங்காயின்பேர்
பண்ணியகுமிகைதானேபயறுமிளையெள்ளாகு
மண்ணியவரகினுமமருவுகோத்திரவமாமே. (௬௨)

குசையொடுகுமுதங்கூர்ச்சங்குசந்தர்ப்பையென்றுகூறும்
பசையுறுபதமேதூர்வைபச்சறுகிளம்புல்சட்ப்
நிசியரிசநமேபீதநிகரில்காஞ்சநியேமஞ்ச
ணைசியுறுமிஞ்சியல்லநறுமருப்பென்றுமாமே. (௬௩)

இலைக்கொடியின்பெயர்—தாம்பூலவல்லி - தாம்பூலி - நாகவல்லி-திரையல்-மெல்லிலை. ஆ ரு.] மிளகின்பெயர்—கறி-மரீசம்-காயம்-கலினை-கோளகம்-திரங்கல்-மிரியல். ஆ எ.

நெல்லின்பெயர்—வரி-சொல்-விரீகி-சாலி-யவம். ஆ ரு.] செஞ்சாலியின்பெயர்—நன்னெல்-செந்நெல். ஆ உ.]பயிரின்பெயர்—பைங்கூழ்-பசும்புல். ஆ உ.]கதிரின்பெயர்—குரல்-எனல். ஆ உ. இளஞ்சூலின்பெயர்-பீட்டை.(க)]இளங்கதிரின்பெயர்-பீள்.(க)

பதரின்பெயர்—பதடி. (க)]நெற்போரின்பெயர்—சும்மை. (க) தூற்றுதநெற்பொலியின்பெயர்—பொங்கழி. (க)] கோதுமையின்பெயர்—கோதி. (க)] அரிசியின்பெயர்—தண்டுலம். (க)] வைக்கோலின்பெயர்—வழுது - வை-பலாலம். ஆ ரு.] மலைநெல்லின்பெயர்—ஐவனம். (க)

வேயரிசியின்பெயர்—தோரை. (க)] குளநெல்லின்பெயர்—நீவாரம்.(க)]கம்பின்பெயர்—செந்தினை-கவலை. ஆ உ.]தினையின்பெயர்—ஏனல். (க)]பைந்தினையின்பெயர்—எனல். (க)]கருந்தினையின்பெயர்—இறடி-கங்கு. ஆ உ.] தினைத்தாளின்பெயர்—அருவி-இருவி. ஆ உ.

துவரையின்பெயர்—ஆடகம். (க)]கடலையின்பெயர்—மஞ்சூரம். (க)]அவரையின்பெயர்—சிக்கடி-சிம்பை. ஆ உ.]உழுந்தின்பெயர்—மாடம். (க)]பயற்றின்பெயர்—முற்கம்.(க)]கொள்ளின்பெயர்—காணம்-குலுத்தம். ஆ உ.]துவரைகடலைமுதலியவற்றின்பெயர்-முதிரை. (க)] காராமணியின்பெயர்-கூலம்-இதை. ஆ உ.

சோளத்தின்பெயர்—சொன்னல்-இறுங்கு. ஆ உ.]எள்ளின்பெயர்—எண்-திலம்-நூ. ஆ ரு. ] எள்ளிளங்காயின்பெயர்—கவ்வை. (க)]இளவெள்ளின்பெயர்—குமிகை. (க)]வரகின்பெயர்—கோத்திரவம். (க)

தர்ப்பையின்பெயர்—குசை-குமுதம்-கூர்ச்சம்-குசம். ஆ சு. அறுகின்பெயர்—பதம்-தூர்வை. ஆ உ.]இளம்புல்லின்பெயர்—சட்பம். (க)]மஞ்சளின்பெயர்—நிசி - அரிசநம்-பீதம்-காஞ்சநி. ஆ சு.]இஞ்சியின்பெயர்—அல்லம் - நறுமருப்பு. ஆ உ.

கருணையினுமங்கந்தஞ்சூரணமென் றங்காட்டுந்
தருவகலியம்விருக்கந்தாவரம்விடபிதாருத்
துருமமேகுசமென்றெட்டுஞ்சொல்லியமரப்பொதுப்பேர்
பரவுபூருகமேசாகிபாதவமென் றும்பன் னும். (சச)

மூலமேசகுநங்கந்தமூலகங்கிழங்கினுமக்
காலொடங்குரமுளைப்பேர்கருது தூர்சிவையேவேராங்
கோலியம்விடபங்கொம்பர்கோடரம்பொங்கர்சாகை
பாலமர்கவடுதாருப்பணைசினையுலவைகொம்பாம். (சரு)

கலையொடாசினியேசேருகாழ்ப்புக்காழ்வயிரமாகுந்
தலமடைதகடென்னஞ்சதநம்பத்திரம்பலாச
மிலைதமாலமுமாமற் றுமிதிற்றழையுலவையென்ப
புலனு றுகுழவிபிள்ளைபோதகம்போத்துக்கன் றும். (சசா)

மெல்லியவிளங்கொம்பின்பேர்மேவியகவரோகப்பாம்
வல்லரிகிசலயம்பூமஞ்சரிமுறியலங்கல்
பல்லவங்குழைதளிர்ப்பேர்பகர்குருத்தேமுருந்து [(சஎ)
சொல்லுங்காற்குழைத்தலோடேயிலிர்த்தலுந்தளிர்த்தலின்பேர்.

முகைநனைகலிகைபோகின்முகுளமேமொக்குண்மொட்டு
மகிழ்வுறுகோரகங்கண்மற்றைச்சாலகமரும்பாந்
தகைபெறுகுசுமம்போதுதாரலர்சுமநசம்பூ
மிகுமணமலரோதாமம்வீயிணர்துணருமொன் றும். (சஅ)

தொத்துமஞ்சரியாண்டுந்தொடர்மலர்த்திரளினுமங்
கொத்துமாமகரஞ்செய்யகொங்குகேசரம்பூந்தாதாம்
வைத்திடுந்துணருமாகுமகரந்தமலர்த்தேனென்ப
பைத்தெழுந்தாதிற்றூளேபராகமாம்பிரசமும்பேர். (சகூ)

அலர்தலேயவிழ்தல்விள்ளனெகிழ்தலாமலர்தலும்பே
ரிலகியவிரிமலர்ப்பேரிகமலர்வெதிர்தொடர்ப்பூப்
பலமறுசாம்பல்செம்மல்பழம்பூவாந்தேம்பலும்பேர்
புலனு றுமேடுந்தோடும்பூவிதழ்மடலுமாமே. (ருய)

கருணைக்கிழங்கின்பெயர்—கந்தம்-சூரணம். ஆ உ.]மரப்பொதுவின்பெயர்—தரு - அகலியம் - விருக்கம் - தாவரம் - விடபி - தாரு - துருமம் - குசம்-பூருகம்-சாகி-பாதவம். ஆ ௰க.

கிழங்கின்பெயர்—மூலம் - சகுநம் - கந்தம் - மூலகம். ஆ ச. முளையின்பெயர்—கால் - அங்குரம். ஆ உ.]வேரின்பெயர்—தூர் - சிவை. ஆ உ.] மரக்கொம்பின்பெயர்—கோல்-இயம்-விடபம்-கொம்பர்-கோடரம்-பொங்கர்-சாகை-கவடு-தாரு - பணை - சினை-உலவை. ஆ ௰உ.

மரவயிரத்தின்பெயர்—கலை-ஆசினி-சேகு-காழ்ப்பு-காழ். ஆ ரு. இலையின்பெயர்—தலம் - அடை - தகடு-பன்னம்-சதநம்-பத்திரம்-பலாசம்-தமாலம். ஆ அ. ]தழையின்பெயர்—உலவை. (க) மரக்கன்றின்பெயர்—குழவி-பிள்ளை-போதகம்-போத்து-ஆ ச.

இளங்கொம்பின்பெயர்—கவர்-கப்பு. ஆ உ.]தளிரின்பெயர்—வல்லரி - கிசலயம் - மஞ்சரி-முறி-அலங்கல் - பல்லவம் - குழை. ஆ எ.]குருத்தின்பெயர்—முருந்து. (க)]தளிர்த்தலின்பெயர்—குழைத்தல் - இலிர்த்தல். ஆ உ.

அரும்பின்பெயர்—முகை - நனை - கலிகை - போகில்-முகுளம்-மொக்குள்-மொட்டு-கோரகம்-சாலகம். ஆ ௯.]மலரின்பெயர்—குசுமம்-போது-தார்-அலர்-சுமநசம்-பூ-தாமம்-வீ-இணர் - துணர். ஆ ௰.

மலர்த்திரளின்பெயர்—தொத்து-மஞ்சரி-கொத்து. ஆ ௩.]பூந்தாதின்பெயர்—மகரம்-கொங்கு-கேசரம்-துணர். ஆ ச.
மலர்த்தேனின்பெயர்—மகரந்தம். (க)
தாதிற்றூளின்பெயர்—பராகம் - பிாசம். ஆ உ.

நெகிழ்தலின்பெயர்—அலர்தல் - அவிழ்தல் - விள்ளல் - மலர்தல். ஆ ச.]விரிமலரின்பெயர்—இகமலர் - வெதிர் - தொடர்ப்பூ. ஆ ௩. ]பழம்பூவின்பெயர்—சாம்பல் - செம்மல்-தேம்பல். ஆ ௩.]பூவிதழின்பெயர்—எடு - தோடு - மடல். ஆ ௩.

அல்லியேயகவிதழ்ப்பேரறைந்திடும்புறவிதழ்ப்பேர்
புல்லியேவடுவும்பிஞ்சும்போற்றுந்தீவிளியுங்காயாம்
பல்லியற்கவிஞர்சொற்றபழங்கனிபலமுமாகு
மெல்லியபரலுங்காழும்பீசமும்விதைவித்தும்பேர். (ருக)

குலைக்குச்சந்தாறுசாறுகுடும்பொடுபடுவுங்கொத்தாம்
பலமிலாமரப்பேர்தானேபகரவகேசியென்று
மலிநமேகாய்த்திருந்தமரமுலர்மரமேவானம்
புலர்விலாக்கோளிவாநபத்தியம்பூவாக்காய்க்கும். (ருஉ)

இந்தநமுருடுகட்டையிடுகறல்சமிதைகாட்டம்
வெந்திடுஞெகிழியேழும்விறகென்பமுளரியும்பேர்
வந்தகோடரம்பொதும்பர்மரச்செறிவாகும்பொந்து
முந்துபேர்பொள்ளலாகுமுட்கடுகண்டகம்மே. (ருங)

துடவைநந்தநவநம்பூந்தோட்டமேயரியுய்யாநங்
கடிபொழிலுத்தியாநங்காமரச்செறிவாராம
நெடியதண்டலையுமப்பேர்நீளுபவநமுநேரும்
வடிவுடையூர்சூழ்சோலைவநமெனவைக்கலாமே. (ருச)

அடவிகான்புறவம்பொச்சையாரணியங்காந்தாரங்
கடம்வநமுளரிதில்லங்ககநங்கண்டகமேதாவம்
விடர்சுரம்பழுவங்கானன்மேவியகட்சிகாநம்
கடறுகாநநமேயத்தங்களரிகாடிருபான்முப்பேர். (ருரு)

நிறைதருதூறுகுன்மநீள்பஞ்சிவிடபமும்பே
ரறலிறல்பதுக்கைமுப்பேரறியலாஞ்சிறியதூறு
குறியகாடிறும்பென்றுகுங்கூறியபெருங்கான்வல்லை
மறையரணிளையிரண்டும்வைத்தகாவற்காட்டின்பேர். (ருசு)

முதையலேயிலையுதிர்ந்தமுதிர்காட்டினாமமாகும்
பொதிகரிகாடுபொச்சைபொருந்துமேயிளைவேலிப்பே
ரதிகமற்றகங்காழ்த்திட்டதாண்மரம்புறக்காழ்பெண்ணும்
விழியுளிவ்விரண்டுமில்லாவெளிறலியாகுமென்ப. (ருஎ)

அகவிதழின்பெயர்—அல்லி. (௧)]புறவிதழின்பெயர்—புல்லி. (௧)
தாயின்பெயர்—வடு-பிஞ்சு-தீவிளி. ஆ ௩.
பழத்தின்பெயர்—கனி-பலம். ஆ ௨.
விதையின்பெயர்—பரல்-காழ்-பீசம்-வித்து. ஆ ௪.

கொத்தின்பெயர்—குலை-குச்சம்-தாறு-சாறு-குடும்பு-படு. ஆ ௬.
பலமிலாமரத்தின்பெயர்—அவகேசி. (௧)]காய்த்திருந்தமரத்தின் பெயர்—பலிநம். (௧)] உலர்ந்தமரத்தின்பெயர்—வானம். (௧)
பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—கோளி-வாநபத்தியம். ஆ ௨.

விறகின்பெயர்—இந்தநம்-முருடு - கட்டை - கறல்-சமிதை -காட்டம்-ஞெகிழி-முளரி. ஆ அ. ]மரச்செறிவின்பெயர்—கோடரம்-பொதும்பர். ஆ ௨. ]மரப்பொந்தின்பெயர்—பொள்ளல். (௧)]முள்ளின்பெயர்—கடு-கண்டகம். ஆ ௨.

ஆராமத்தின்பெயர்—துடவை-நந்தநவநம்-பூந்தோட்டம்-அரி-உய்யாநம்-பொழில்-உத்தியாநம் - கா-மரச்செறிவு - தண்டலை-உபவநம். ஆ ௰௧.
ஊர்சூழ்சோலையின்பெயர்—வநம். (௧)

காட்டின்பெயர்—அடவி-கான்-புறவம்-பொச்சை- ஆரணியம்-காந்தாரம்-கடம்-வநம்-முளரி -தில்லம்-ககநம்-கண்டகம்-தாவம்-விடர்-சுரம்-பழுவம்-கானல் - கட்சி-காநம்-கடறு-காநநம்-அத்தம்-களரி. ஆ ௨௩.

பெருந்தூறின்பெயர்—குன்மம்-பஞ்சி-விடபம். ஆ ௩.]சிறுதூறின்பெயர்—அறல்-இறல்-பதுக்கை. ஆ ௩.]குறுங்காட்டின்பெயர்—இறும்பு. (௧)]பெருங்காட்டின்பெயர்—வல்லை. (௧)
காவற்காட்டின்பெயர்—அரண்-இளை. ஆ ௨.

முதிர்காட்டின்பெயர்—முதையல். (௧)] கரிகாட்டின்பெயர்—பொதி-பொச்சை. ஆ ௨.] வேலியின்பெயர்—இளை. (௧)]ஆண்மரமென்பது—அகங்காழ்த்திட்டது.(௧)]பெண்மரமென்பது—புறக்காழ். (௧)]அலிமரமென்பது—வெளிறு. (௧)

புண்டரீகத்தினோடம்போருகங் குசேசயம்பூ
முண்டகமரவிந்தம்மேமுளரிபங்கயம்வாரீச
மிண்டையம்புயஞ்சரோசமெழிற்சதபத்திரிசூழ்ந்து
வண்டுளர்நளிநங்கஞ்சமவநசந்தாமரையினாமம். (ருஅ)

சலசமேகமலமற்றுஞ்சார்ந்தகோகநதத்தோடு
தலமுணுந்திருமாலுந்திசரோருகம்பதுமமும்பேர்
மலரின்பேரிறும்புவாகுமற்றிராசீவமும்பேர் [ம். (ருகூ)
புலர்வில்பொன்னிறத்தகொட்டைப்பொகுட்டேகன்னிகையுமாகு

விரித்திடுஞ்சுருளினாமம்விசியொடுவளையமாகு
மருக்கிளர்தாமரைக்காய்வராடகமென்பநூலோ
ரரத்தமுற்பலமேவாசமடர்ந்தசெங்குவளைசோலத்
திருக்கிளர்கல்லாரங்கள்செங்கழுநீரின்பேரே. (சூ0)

கோலமார்பானல்காவிகுவலயமணத்தைமொண்டு
காலத்தேதனுலவுகின்றகருங்குவளைக்குநாம
நீலமிந்தீவரந்தானிகழ்கருநெய்தலென்ப
கோலவுற்பலமுமாகுங்குமுதம்வெண்ணெய்தற்பேரே. (சூக)

செங்குமுதஞ்செவ்வல்லிசேதாம்பலரக்காம்பற்பேர்
வெங்கள்ளுநாறுமல்லிகைரவம்வெள்ளாம்பற்பேர்
தங்கியதிரள்கோரைப்பேர்சாய்பஞ்சாய்க்கோரையென்ப
வங்குளசெருந்திதானேயடர்ந்தவாட்கோரையாமே. (சூஉ)

தெள்ளியகண்டன்முள்ளியுள்ளத்தமுண்டகமேயன்றி
முள்ளுடைமூலம்பாவுமுண்டகமென்றேசாற்றுந்
தள்ளியநாரம்பாசிசைவலஞ்சடைச்சியும்பேர்
வள்ளியகல்லாரந்தான்மற்றைநீர்க்குளிரியாமே. (சூங)

வல்லியும்புல்லும்பூடுமர்முதன்மருந்தென்றாகுஞ்
சல்லியகரணிகூர்வேறைத்தபுண்மாற்றுந்துண்டம்
புல்லியசெய்வதானேசந்தாநகரணிபோலு
மெல்லியவிரணந்தீர்க்குஞ்சமநியகரணிவேறே. (சூச)

தாமரையின்பெயர்—புண்டரீகம் - அம்போருகம் - குசேசயம்-மூண்டகம்-அரவிந்தம்-முளரி-பங்கயம்-வாரீசம்-இண்டை-அம்புயம்-சரோசம்-சதபத்திரி-நளிநம்-கஞ்சம்-வநசம். (௰௫)

சலசம்-கமலம்-கோகநதம்-திருமாலுந்தி-சரோருகம்-பதுமம். (௯) ஆ ௨௧.] தாமரைமலரின்பெயர்—இறும்பு இராசீவம். ஆ ௨.] தாமரைக்கொட்டையின்பெயர்—பொகுட்டு-கன்னிகை. ஆ ௨.

தாமரைச்சுருளின்பெயர்—விசி-வளையம். ஆ ௨.] தாமரைக்காயின்பெயர்—வராடகம். (௧)] செங்கழுநீரின்பெயர்—ஆத்தம்-உற்பலம்-செங்குவளை-கல்லாரம். ஆ ௪.

கருங்குவளையின்பெயர்—பானல்-காவி-குவலயம். ஆ ௩.
கருநெய்தலின்பெயர்—நீலம்-இந்தீவரம்-உற்பலம். ஆ ௩.
வெண்ணெய்தலின்பெயர்—குமுதம். (௧)

அரக்காம்பலின்பெயர்—செங்குமுதம்-செவ்வல்லி-சேதாம்பல். ஆ ௩.] வெள்ளாம்பலின்பெயர்—அல்லி-கைரவம். ஆ ௨.] நீர்க்கோரையின்பெயர்—சாய்-பஞ்சாய்க்கோரை. ஆ ௨.] வாட்கோரையின்பெயர்—செருந்தி. (௧)

முள்ளியின்பெயர்—கண்டல்-முண்டகம். ஆ ௨.] முள்ளுடைமூலமெல்லாவற்றிற்கும்பெயர்—முண்டகம். (௧)] பாசியின்பெயர்—நாரம்-சைவலம்-சண்டச்சி. ஆ ௩.] நீர்க்குளிரியின்பெயர்—கல்லாரம். (௧)

மருந்தென்னும்பெயர்—வல்லி-புல்-பூடு-மரமுதலிய - சலலியகரணியென்பது—வேல்தைத்தபுண்மாற்றுவது - சந்தானகரணியென்பது—துண்டம்பல்லிடச்செய்வது-சமநியகரணியென்பது—இரணந்தீர்ப்பது.

மறைறவிலாமிருதசஞ்சிவநியுடனமுதிராண்டுங்
குறைவறமூர்ச்சைதீர்த்தேகுற்றுயிர்தருமருந்தா
முறைபொடுகுளியம்யோகமுறுமருந்தின்பொதுப்பே
ரறையுங்காலந்தப்பேரோயதகமுமாகுமென்ப. (௬௫)

அலங்கலேபிணையலாரஞ்சிகழிகைப்பணிசுருக்கை
யிலம்பகந்தெரியல்சுக்கையேற்றகத்திகையேதாமந்
துலங்கியபடலைகண்ணிதொடைதொங்கலொலியல்கோதை
மலர்ந்ததாரிவைமூவாறுமாலைமஞ்சரியுமப்பேர். (௬௬)

சூட்டுடனிலம்பகங்கள்சூழ்நுதலணியென்றுகுந்
தீட்டுவாசிகையின்பேரோசிகழிகைபடலையென்ப
வீட்டியகல்விகேள்வியிருங்குடிகொடைபடைக்குள்
வாட்டமில்லவனாவென்றுமௌலிசூட்டுவதுவாகை. (௬௭)

பரப்புநீருலகுதன்னிற்பாவலர்கிளைஞருற்ற
திறப்படுங்குணபத்திரன்றுணித்தலும்போற்றிசெய்து
விருப்புறுவிரதசீலன்வீரமண்டலவன்செய்தான்
மரப்பெயர்க்கறுபத்தெட்டுமன்னியகவிதைதானே. (௬௮)

நான்காவதுமரப்பெயர்த்தொகுதிமுற்றிற்று

முற்றும்.



மூர்ச்சைதீர்த்துக் குற்றுயிர்தருமருந்தின்பெயர்—மிருதசஞ்சீவநி-அமுது. ஆக ௨.]மருந்தின்பொதுப்பெயர்—உறை-குளியம்-யோகம்-அகதம். ஆக ௪.

மாலையின்பெயர்—அலங்கல் - பிணையல்-ஆரம் சிகழிகை-அணி-சுருக்கை - இலம்பகம் - தெரியல் - சுக்கை - கத்திகை - தாமம்-படலை - கண்ணி - தொடை - தொங்கல் - ஒலியல் - கோதை - தார் - மஞ்சரி. ஆக ௰௯.

நுதலணியின்பெயர்—சூட்டு-இலம்பகம். ஆக ௨.
வாசிகையின்பெயர்—சிகழிகை-படலை. ஆக ௨.
வாகையாவது—கல்விகேள்விகுடிகொடைபடை
கட்குள்வாட்டமில்லனாவென்றுமேம்பட்டுவது.





ஐந்தாவது



# இடப்பெயர்த்தொகுதி

## காப்பு.



கடலெழுமிரவிகோடிகால்சீத்துப்பொடித்துதென்ன
மடலவிழ்கமலவூர்திவந்தவர்மனையேபோற்றி
யடைவுளதிணைதேமூர்வானகம்புறமாதியாக
விடனுடைத்தாகவைத்தவிடப்பெயர்த்தொகுதிசொல்வாம் (௧)



கேடிலாவப்பவருக்கங்கேவலங்கைவலங்கள்
வீடொடுசிவமேசித்திமீளாதகதியேநூலோர்
பாடுநிர்வாணத்தோடுபஞ்சமகதியேமுத்தி
நீடுபீடைநந்துமோக்கமமுதமுநிகழ்த்தலாமே (௨)

உயர்நிலையுவணைபுத்தேளுலகுபொன்னுலகுதாநம்
வியனுலகந்துறக்கமேனுலகம்விமாந
நயனுறுசுவர்க்கங்கற்பநாகம்விண்ணுலகோடும்பர்
செயமுறுதேவலோகஞ்சிறந்திடுமீரேழ்பேரே. (௩)

பரவியநாகலோகம்பவநமாஞ்சேடிசேணி
விரவுவிஞ்சையரூர்மற்றும்வீழதோகதியாதாள்
திரயமேயளறேதீயேநீள்சுவப்பிரமேயூழ
ணரகிருள்பவர்க்கம்பத்துநரகமாம்பூதியும்பேர். (௪)

அரிதமாதிரம்விசும்போடம்பரமுலகுகாட்டை
கருதியதிசையோடாசைககுபமுந்திசையுந்திக்காம்
பெருகுபூருவங்குணக்கேபிராசியிந்திரிகிழக்காந்
தெரிதருமவாசியாமுந்தக்கணஞ்சிவேண்டைதெற்கே. (௫)

குடக்குவாருணமேமேக்குக்குறித்தபச்சிம்மேமேற்கா
நடத்தியபிரத்தியக்குமற்றதன்பேரேநாட்டும்
வடக்குத்தக்குதீசியென்பமற்றையுத்தரமுமாகும்
விடப்படாத்திணையேமாவேவேலிபூநிலநாற்பேரே. (௬)

அவநிகாசிநிசகத்தோடகலிடமகிலம்பாரி
குவலயம்விபுலைமற்றைக்கோத்திரைகோவேகுவ்வே
புவநிமண்டிலந்தலம்பூப்பொழில்வசுந்தரையுடன்பார்
பவநந்தாரணியினோடுபடிபுவிதரணிவையம். (௭)

தாலமேயசலைநேமிவசுமதிதணைதரித்திரி
ஞாலந்தாத்திரியளக்கர்நாடுபூதலங்கிடக்கை
பாலமேபூதியங்கள்பார்த்திவம்பொறையேபூமி
வேலைசூழ்மகியாறேழுமேதிநியுலகுமப்பேர். (௮)

மோக்கத்தின்பெயர்—அபவருக்கம்-கேவலம் - கைவலம் - வீடு-சிவம் - சித்தி - மீளாதகதி - நிர்வாணம் - பஞ்சமகதி - முத்தி-அமுதம். ஆ ௰௧.

தேவலோகத்தின்பெயர்—உயர்நிலை - உவணை - புத்தேளுலகு - பொன்னுலகு-தாநம்-வியனுலகம்-துறக்கம்-மேலுலகம்-விமாநம்-சுவர்க்கம்-கற்பம்-நாகம்-விண்ணுலகு-உம்பர். ஆ ௰௬.

நாகலோகத்தின்பெயர்—பவநம். (க)] விஞ்சையருரின்பெயர்—சேடி-சேணி. ஆ உ.] நரகத்தின்பெயர்—அதோகதி-பாதாளம் நிரயம்-அளறு-தீ-சுவப்பிரம்-ஊழல்-நரகு-இருள் - பவர்க்கம்-பூதி. ஆ ௰௧.

திக்கின்பெயர்—அரிதம்-மாதிரம்-விசும்பு-அம்பரம்-உலகு - காட்டை-திசை-ஆசை-ககுபம்-திகை. ஆ ௰.] கிழக்கின்பெயர்—பூருவம்-குணக்கு-பிராசி-இந்திரி. ஆ ௪.] தெற்கின்பெயர்—அவாசி-யாமம்-தக்கணம்-சிவேதை. ஆ ௪.

மேற்கின்பெயர்—குடக்கு - வாருணம் - மேக்கு-பச்சிமம்-பிரத்தியக்கு. ஆ ரு.] வடக்கின்பெயர்—உதக்கு - உதீசி - உத்தரம். ஆ ௩.] நிலத்தின்பேயர்—திணை - மா - வேலி - பூ. ஆ ௪.

மேதிநியின்பெயர்—அவநி-காசிநி-சகம் - அகலிடம் - அகிலம்-பாரி-குவலயம்-விபுலை-கோத்திரை-கோ-கு-புவநி - மண்டிலம்-தலம்-பூ-பொழில் - வசுந்தரை - பார் - பவநம் - தாரணி-படி-புவி-தரணி-வையம். (உ௪)

தாலம் - அசலை - நேமி - வசுமதி - தரை - தரித்திரி - ஞாலம் - தாத்திரி - அளக்கர் - நாடு - பூதலம் - கிடக்கை - பாலம் - பூதியம்-பார்த்திவம் - பொறை-பூமி-மகி-உலகு. (௰௯) ஆ ௪௩.

யாடுபாண்டிலமேசம்மைபைதிரமுலகுதேய
நீடியவகலுளேணிநீவரங்கோட்டங்கண்டம்
பீடுறுசநபதங்கள்பெரும்பொழிலிவைபன்மூன்று
நாடெண்ணடையுமாகுமழுவமுநாட்டுமப்பேர் (௯)

விலங்கலேபொறைவேதண்டம்விண்டுமாதிரமேவெற்பு
சிலம்புகோத்திரமடுக்கல்சிலோச்சயஞ்சிமயம்பொங்கர்
நலங்கொள்குத்திரம்பறம்புநகங்குறும்பொறையேநாக
மிலங்கியவரையேபொச்சைசிறும்புகல்லகமேயோங்கல். (௰)

பொருப்பொடுதுவ்வுகல்லுப்பொருட்டொடுதிகிரிகுன்று
பருப்பதஞ்சைலஞ்சாரல்பாதவம்பதலைதாணுப்
பெருத்தபூதரத்தொடுபிறங்கலத்திரியேபீலி
யுருத்தெழுகிரிமலைப்பேரொன்றொழியெண்ணைந்தென்ப. (௰௧)

புடையடுசிறும்புகுன்றுபொற்றையேசிறுமலைப்பேர்
படுகுறும்பொறையுமற்றைப்பதலையுமதன்பேர்பன்னுந்
தடமொடுசாரல்வாரஞ்சாநுவேமலைப்பக்கப்பேர்
கொடுமுடிசிகரங்கோடுகூடமேமலையினுச்சி (௰௨)

நிலைபெறும்பொன்மலைப்பேர்நீண்டமந்தரமேமேரு
விலையில்வெண்மலைவேதண்டம்விசயார்த்தம்வெள்ளிவெற்பா
மலையந்தென்மலையேதென்றல்வருமலைசிமயநான்கும்
புலமையாங்கும்பயோநிபொதியமாமலையினாமம். (௰௩)

பொறைதூறுகல்லென்றுகும்புகளுங்கற்பாழிகாண்டை
முறைமையாம்விவரத்தோடுமுடுக்கர்கந்தரமுழைப்பே
ரறைமுரஞ்சாம்பிலக்கீழறையென்பகுகைநிகுஞ்சஞ்
சிறுகியதிடர்பதுக்கைதிட்டையுமிட்டநாமம். (௰௪)

சிலையொடுகன்னேசையஞ்சிராவணமுபலங்கல்லா
முலமென்பதிரண்டகற்பேருறும்பால்பருக்கையென்ப
துலைபெறுதிடறுதிட்டைசவண்மேட்டுக்குவாலேகுப்பை
குலவியதிடரோமேடுகுவையென்றுமிவையேகூறும். (௰௫)

ஒன்பதாவது

## செயல்பற்றியபெயர்த்தொகுதி.

### காப்பு.

வியன்மிக்கவயிரத்தால்வேர்வீழ்த்துபொற்கவடுகொண்டு
மயமிக்கமரகதத்தால்வண்டழைபொதுளிப்பூந்தொத்
தியலுற்றபதுமராகமெதிர்பிண்டியிறைதாள்போற்றிச்
செயல்பற்றும்பெயர்க்கூட்டத்தைச்செப்புவம்யாங்கேண்மின்.
[(க)



செயல்விதிகருமங்கன்மஞ்செய்தொழில்வினையுமப்பே
ரயர்தலேவினைதலாற்றல்குயிறலோடிழைத்தலும்பேர்
நியமித்தல்விதித்தன்மற்றுநிருமித்தலொடுசிட்டித்தல்
பயனுறப்படைத்தலோடுபாரித்தல்பிறப்பித்தற்பேர். (௨)

தொடலையுண்டாட்டுப்பொய்தல்சூழ்விலாசனைநபேவண்டல்
கெடவரல்பண்ணையுப்புக்கிரீடையேகேளியத்தும்
புடைமுலையாராடற்பேர்பொழுதுபோக்கேவிநோதம்
படிபாராட்டுதல்குலாவல்பரிந்துகொண்டாடன்மெச்சல். (௩)

வதுவைகைப்பற்றலேதீவலஞ்செய்தன்மணங்கல்யாணம்
விதியுள்வேட்டன்மன்றல்விவாகமென்பேர்விளங்கும்
புதுவிழாமுருகுசாறுபுத்தேளுற்சவமாஞ்சேறு
துறைமலர்கொண்டுபோற்றுந்துணங்கறலிரண்டுமப்பேர். (௪)

புனைதல்கைசெய்தல்வேய்தல்பொற்புடனலங்கரித்தல்
வனைதலேயணிதல்பூசன்மண்ணலொப்பனையென்பேராம்
வனமலர்மிலைதல்வேய்தன்மலைதல்சூடுதலிம்முப்பேர்
இனைமலரடைச்சலோடுசெருகுதல்சொருகுதற்பேர். (௫)

அருந்திடறுய்த்தன்மாந்தலயிறலேயமுதுசெய்தல்
பொருந்தவேதாங்கைதொட்டல்புசித்தல்போசநமேயார்தல்
பரிந்தனர்நுகர்தறின்றல்பாரணமிசைதறுற்ற
லிருந்துணற்பேரீரேழாமேற்றிடல்விழுங்கலுங்கல். (௬)

துயிலல்கண்வளர்தல்பள்ளிதுயிறலேயுறங்கறுஞ்சல்
பயிலுங்கண்படையனந்தர்படைகள்வோடுபத்து
மியலுநித்திரையாந்தூங்கலென்பதுநிம்பாத்தூக்க
மயலவொடுத்தலேற்றலாங்கவையெழுப்பலாமே. (௭)

விராவியவழுதலின்பேர்விம்மலேகலுழ்கலக்கம்
பொருமுதல்கசிவேயேங்கலுரோதநமிரங்கலெட்டாந்
தெரிசனைபார்வைநோக்கஞ்சிறப்பிற்கண்ணுறல்காண்டற்பே
ரருமையிற்சிறக்கணித்தல்பாங்கமேகடைக்கணித்தல். (௮)

செய்தொழிலின்பெயர்—செயல்-விதி-கருமம் - கன்மம் - வினை. ஆ ரு.] ஆற்றலின்பெயர்—அயர்தல்-வனைதல் - குயிறல்-இழைத்தல். ஆ ௪.] பிறப்பித்தலின்பெயர்—நியமித்தல்-விதித்தல்-நிருமித்தல்-சிட்டித்தல்-படைத்தல்-பாரித்தல். ஆ ௬.

மகளிர்விளையாட்டின்பெயர்—தொடலை-உண்டாட்டு-பொய்தல்-விலாசனை-வண்டல்-கெடவரல்-பண்ணை-உப்பு-கிரீடை-கேளி- ஆ ௰.] பொழுதுபோக்கலின்பெயர்—விநோதம். (க)] மெச்சலின்பெயர்—பாராட்டுதல்-குலாவல்-கொண்டாடல். ஆ ௩.

விவாகத்தின்பெயர்—வதுவை-கைப்பற்றல் - நீவலஞ்செய்தல் - மணம்-கல்யாணம்-விதியுளி-வேட்டல்-மன்றல். ஆ ௮.
உற்சவத்தின்பெயர்—விழா - முருகு - சாறு - சேறு - துணங்கறல். ஆ ரு.

ஒப்பனையின்பெயர்—புனைதல்-கைசெய்தல்-வேய்தல்-அலங்கரித்தல்-வனைதல்-அணிதல்-பூசல்-மண்ணல். ஆ ௮.
சூடுதலின்பெயர்—மிலைதல்-வேய்தல்-மலைதல். ஆ ௩.
சொருகுதலின்பெயர்—அடைச்சல்-செருகுதல். ஆ ௨.

உண்ணலின்பெயர்—அருந்திடல்-துய்த்தல்-மாந்தல் - அயிறல் - அமுதுசெய்தல்-கைதொட்டல்-புசித்தல்-போசநம் - ஆர்தல்-நுகர்தல்-தின்றல்-பாரணம்-மிசைதல்-துற்றல். ஆ ௰௪.
நுங்கலின்பெயர்—எற்றிடல்-விழுங்கல். ஆ ௨.

நித்திரையின்பெயர்—துயிலல்-கண்வளர்தல்-பள்ளி - துயிறல்-உறங்கல்-துஞ்சல்-கண்பிடை-அனந்தர்-படை-கனவு. ஆ ௰.
நிரம்பாத்தூக்கத்தின்பெயர்—தூங்கல். (க)
ஏழுப்பலின்பெயர்—எடுத்தல்-எற்றல். ஆ ௨.

அழுதலின்பெயர்—விம்மல்-கலுழ்-கலக்கம்-பொருமுதல் - கசிவு-எங்கல்-உரோதநம்-இரங்கல். ஆ ௮.] காண்டலின்பெயர்—தெரிசனை-பார்வை-நோக்கம்-கண்ணுறல். ஆ ௪.
கடைக்கணித்தலின்பெயர்—சிறக்கணித்தல்-அபாங்கம். ஆ ௨.

பூவுதாநம்பருத்தல்பொழிதலேயுதவனீட்டல்
விரவுபகாரம்வேள்விவிதரணங்கவிகைவண்மை
யருளல்வேளாண்மையீகையளித்தலேயுதாரம்வீச
றருதன்மூவாறுபேருங்கொடைகடப்பாடுஞ்சாற்றும். (௯)

படைமயக்குற்றபோதும்படைமடமொன்றிலாதான்
மடைசெறிகடகத்தோளான்மதிக்குடைமன்னர்மன்னன்
கெடிமன்னர்வணங்குந்தாளான்கிருட்டிணராயன்கைபோற்
கொடைமடமென்றுசொல்பவரையாதுகொடுத்தலாமே. (௰)

போற்றியபயிக்கம்பாகம்பொருந்தியபலியேபிண்டஞ்
சாற்றியபிடிதமையஞ்சரிதையேழ்பிச்சையின்பே
ரேற்றலேகுறைகோள்பின்சென்றிரத்தலேவேண்டலும்பேர்
மாற்றலேகரத்தலாகுமறுத்தலுநிறுத்தலும்பேர். (௰௧)

தெரித்தலேவரைதலோடுதீட்டுதல்பொறித்தல்கீறல்
வரித்தலேயெழுதலின்பேர்வரிபொறிகணக்கிரேகை
விரித்தவக்கரமெழுத்தாம்விரகொடுசிதைத்தறேய்த்த
லரக்குதல்கீழ்தலும்பேரடைவேதாய்தாக்கல்சித்தல். (௰௨)

அர்ச்சனைவழிபாடேயாராதனைபூசனைப்பே
ரொச்சமேகிருதுவேள்வியாகமேயிட்டியூப
மெச்சியமகமேயோமம்விதியுளியெண்பேராகு
நிச்சயமீதூரற்பேரிடங்கழிநெருங்கலும்பேர். (௰௩)

வியர்த்தலேசுவேதம்வேர்வாங்கசிவுமாமயர்வுயிர்த்தன்
மயக்கறவருத்தந்தீர்தல்வடுப்படல்கதுவாயாமே
யுயிர்த்தலேவிடுதலென்பவொருங்கென்பவடங்கருனே
கயக்குச்சோர்வாம்பிறக்குக்காட்டியவழுவின்பேரே. (௰௪)

மூடுதல்கவித்தன்மூய்தன்முடியவேபாத்தலூர்த
னீடியதாநமென்பநிகழ்த்துமஞ்சநத்திருமை
மாடலேபடிதறோய்தலாயிவைகுளித்தலென்ப
பீடறப்பிறகிடம்பேர்பிறக்கிடல்பின்றலாமே. (௰௫)

கொடையின்பெயர்—புரவு-தானம்-பகுத்தல்-பொழிதல்-உதவல்-நீட்டல்-உபகாரம்-வேள்வி-விதரணம்-கவிகை-வண்மை-அருளல்-வேளாண்மை-ஈகை-அளித்தல்-உதாரம்-வீசல்-தருதல்-கடப்பாடு. ஆ௨ ௰௯.

வரையாதுகொடுத்தலின்பெயர்—கொடைமடம். (க)

பிச்சையின்பெயர்—பயிக்கம்-பாகம்-பலி-பிண்டம்-பிடிதம்-ஐயம்-சரிதை. ஆ௨ ௭.
இரத்தலின்பெயர்—ஏற்றல்-குறைகோள்-வேண்டல். ஆ௨ ௩.
கரத்தலின்பெயர்—மாற்றல்-மறுத்தல்-நிறுத்தல். ஆ௨ ௩.

எழுதலின்பெயர்—தெரித்தல்-வரைதல்-தீட்டுதல்-பொறித்தல்-கீறல்-வரித்தல். ஆ௨ ௬.] எழுத்தின்பெயர்—வரி-பொறி-கணக்கு-இரேகை-அக்கரம். ஆ௨ ௫.] ஆக்குதலின்பெய்ர்—சிதைத்தல்-தேய்த்தல்-கீழ்தல். ஆ௨ ௩.] தாய்தாக்கலின்பெயர்—சீத்தல். (க)

பூசனையின்பெயர்—அர்ச்சனை-வழிபாடு-ஆராதனை. ஆ௨ ௩.
எச்சத்தின்பெயர்—கிருது-வேள்வி-யாகம்-இட்டி-யூபம்-மகம்-ஓமம்-விதியுளி. ஆ௨ ௮.
மீதூரலின்பெயர்—இடங்கழி-நெருங்கல். ஆ௨ ௨.

வேர்வின்பெயர்—வியர்த்தல்-சுவேதம்-கசிவு. ஆ௨ ௩.] வருத்தந்தீர்தலின்பெயர்—அயர்வுயிர்த்தல். (க)] வடுப்படலின்பெயர்—கதுவாய். (க)] விடுதலின்பெயர்—உயிர்த்தல். (க)] அடங்கலின்பெயர்—ஒருங்கு. (க)] சோர்வின்பெயர்—கயக்கு. (க)] வழுவின்பெயர்—பிறக்கு. (க)

மூடுதலின்பெயர்—கவித்தல்-மூய்தல். ஆ௨ ௨.] பரத்தலின்பெயர்—ஊர்தல். (க)] மஞ்சனத்தின்பெயர்—நாநம் (க)] குளித்தலின்பெயர்—ஆடல்-படிதல்-தோய்தல். ஆ௨ ௩.
பிறக்கிடலின்பெயர்—பிறக்கிடல்-பின்றல். ஆ௨ ௨.

முடக்கமேமடங்கல்குத்திமுணங்கொடுநொறிலொடுக்க
மடக்கமாம்வதிதல்வைகல்லகலேயிறுத்தருழ்தல்
விடுத்தலாறுந்தங்கற்பேர்வசித்தலோடுறையும்பே
ரொடுக்கமேபதுங்கல்பார்த்தலுஞாத்தலேயுரிஞ்சநேட்த்தல். [(௰௬)

மெலிவின்மைதுநம்புணர்ச்சிவிழைச்சொடுவிழைவுதல்லே
கலவியேகிரீடையாடல்காதலோர்கூட்டமெண்பேர்
புலவியேபுலத்தலென்பவூடலுமதன்பொருட்டே
நலமிகுதுனியெனுஞ்சொருட்டியபுலவிநீட்டம். (௰௭)

கூடியுங்கூட்டமின்மைகுலவியபுலவியென்ப
ஊடலேநணுகாராகியுரைமறுத்திருத்தலாகு
மாடவர்நீங்கவுள்ளேயடைத்துமுனிவேயென்ப
ரூடலைத்தீர்த்தலின்பேருணர்த்தலேயொல்லலும்பேர். (௰௮)

வந்தனைபணிதல்காணல்வந்தித்தல்பணிவிறைஞ்ச
றந்தலைவணங்கல்பார்த்தருழ்தலொன்பானுந்தண்டன்
முந்தியதழுவல்விள்ளன்முயங்கலாலிங்கநப்பே
ரந்தமாத்தொழல்கைகூப்பலஞ்சலிகும்பிடற்பேர். (௰௯)

துஞ்சலேவீடன்மாளல்சொற்றிடும்விளிவுவீவு
முஞ்சலேசமாறுபொன்றன்முடிதலேதுவன்றன்மாய்த
லெஞ்சியமாணம்வியோகமில்லெனல்கழிவிறத்த
லஞ்சியதபுதல்சாவினபிதாநம்பன்னேழாமே. (௨௰)

பரிதலேஞெமிர்தல்பற்றுதொடிதலேயிடிதல்சாவ
முரிதலேயிறுதலாறுமுறிதலேயொசிதலும்பே
ரிரிதலேநரிதல்சோரலிடைதலேயுடைதலோடு
சரிதலேகெடுதலேழுஞ்சாய்தலினமமாமே. (௨௧)

ஒசித்தலேயகைத்தல்கோடலொடித்தலேமுறித்தலின்பே
ரிசித்தலேஞெமிர்த்தலோடேயிறுத்தலுமதன்பேரொன்ப
வொசிந்திடலசைதல்சாய்ந்தேயுவளலுந்துவளலாமே [(௨௨)
ரிசைப்பின்பேர்புணர்ச்சிமற்றையிசைவுமாயியைபுமாமே.

அடக்கத்தின்பெயர்—மூடக்கம்-மடங்கல் - குத்தி - முணங்கு-தொறில்-ஒடுக்கம். ஆ௨ ௬.] தங்கலின்பெயர்—வதிதல்-வைகல்-அல்கல்-இறுத்தல்-தாழ்தல்-விடுத்தல்-வசித்தல்-இறை. ஆ௨ ௪. பாந்தலின்பெயர்—ஒடுக்கம் - பதுங்கல். ஆ௨ ௨.] தேய்த்தலின் பெயர்—உரோத்தல்-உரிஞ்சல். ஆ௨ ௨.

காதலோர்கூட்டத்தின்பெயர்—மைதுநம்-புணர்ச்சி-விழைச்சு-விழைவு-தல்-கலவி-கிரீடை-ஆடல். ஆ௨ ௮.
புலத்தலின்பெயர்—புலவி-ஊடல். ஆ௨ ௨.
புலவிநீட்டத்தின்பெயர்—துனி. (க)

புலவியென்பது—கூடியுங்கூட்டமின்மை.
ஊடலென்பது—நணுகாராகியுளாமறுத்திருத்தல்.
துனியென்பது—ஆடவர்நீங்கவுள்ளேயடைத்திருத்தல்.
ஊடலைத்தீர்த்தலின்பெயர்—உணர்த்தல்-ஒல்லல். ஆ௨ ௨.

தண்டனிடலின்பெயர்—வந்தனை-பணிதல்-காணல்-வந்தித்தல்-பணிவு-இறைஞ்சல்-வணங்கல்-பார்த்தல்-தாழ்தல். ஆ௨ ௯.
ஆலிங்கநத்தின்பெயர்—தழுவல்-விள்ளல்-முயங்கல். ஆ௨ ௩.
கும்பிடலின்பெயர்—தொழல்-கைகூப்பல்-அஞ்சலி. ஆ௨ ௩.

சாவின்பெயர்—துஞ்சல்-வீடல்-மாளல்-விளிவு-வீவு-முஞ்சல்-சமாதி-பொன்றல்-முடிதல்-துவன்றல்-மாய்தல்-மரணம்-வியோகம்-இல்லெனல்-கழிவு-இறத்தல்-தபுதல். ஆ௨ ௰௭.

முறிதலின்பெயர்—பரிதல்-ஞெமிர்தல்-ஒடிதல்-இடிதல்-முரிதல்-இறுதல்-ஒசிதல். ஆ௨ ௭.
சாய்தலின்பெயர்—இரிதல்-நெரிதல்-சோரல்-இடைதல்-உடைதல்-சரிதல்-கெடுதல். ஆ௨ ௭.

முறித்தலின்பெயர்—ஒசித்தல்-அலைத்தல்-கோடல்-ஒடித்தல்-இசித்தல்-ஞெமிர்த்தல்-இறுத்தல். ஆ௨ ௮.
துவளலின்பெயர்—ஒசிந்திடல்-அசைதல்-உவளல். ஆ௨ ௩.
இசைப்பின்பெயர்—புணர்ச்சி-இசைவு-இயைபு. ஆ௨ ௩.

வசைப்படவலித்தல்சூழ்தல்வளாகமுழம்வளைத்தன்முப்பே
ரிசைத்திடிற்பிடித்தலின்பேர்தொடல்பற்றலிருபேராகும்
விசித்தலேதொடுத்தல்பந்தம்வீக்குதல்சிமிழ்த்தல்யாப்பே
யசைத்தலேபிணித்தலார்த்தலென்பதுங்கட்டலாமே. (௨௩)

அரிதலின்பேர்சேதித்தலறுத்திடல்வடுவாய்செய்தல்
விரிவுறச்சூலல்கொய்தல்விதியுளியீர்தலாறும்
பரிதல்கண்டித்தலோடுபகுத்திடறடிதலெற்ற
றரமுறத்துமித்தலாறும்வெட்டலாந்தறித்தலும்பேர். (௨௪)

கீறலேகீளல்கீண்டல்கிழித்திடல்கீன்றல்கீழ்தல்
பீறலாறும்பேர்மற்றுப்பிளிறலேகுண்டல்கிண்டன்
மாறிடக்கிளைத்தன்முப்பேர்வரன்றறெள்ளுதல்கொழிப்பா
மாறலேவழிப்பறித்தலதர்கோளுமப்பேராமே. (௨௫)

கட்டலேகளைதல்குற்றல்பறித்தல்கத்தரித்தல்கொய்தல்
குட்டலேதகர்த்தலாகுமுடைத்தலுங்கூறுமப்பேர்
தொட்டலேயகழ்தலென்பதோடுதலேருண்டுதலுமப்பேர்
தட்டலேதகைத்தலாணைதடுத்தல்வாரித்தலும்பேர். (௨௬)

அடுத்ததுப்புரவுந்துய்வுமைம்பொறிநுகர்வவாகும்
விடுத்தன்மோசநமேமோக்கம்வீதமாந்தீர்தலும்பே
ரடுக்குதற்பேரோயேற்றலாமோவலொழிதலென்ப
நடுக்கமோடிறங்குதற்பேர்தூங்குதல்குனிவுநாட்டும். (௨௭)

வலத்தலேநிணத்தலென்பமுடைதலாமாற்றலின்பேர்
விலக்கலாமிசையின்பேரோம்பிசையாந்தாபித்த
னிலைப்படச்செய்தலாகுநிறுத்தலேநோன்றலென்ப
சொலித்திடவிடத்தலாகுந்துவர்தலேவகிர்தலென்ப. (௨௮)

சிதர்த்தலேயுகுத்தலூவல்சிந்தலேயுளர்தலும்பே
ரெதிர்த்துவீசுதலேயேர்ச்சல்செலவிடலெறிதன்முப்பே
ரிதத்தொடுபொருத்தன்மாட்டலிருபெயர்மூட்டலென்ப
நனுத்தலேநொதுத்தலோடுநவித்தலுமவித்தற்பேரே. (௨௯)

புடைத்தலேயெறிதலெற்றல்பொத்தெனக்குத்தன்முப்பே
ரடித்தலேகொட்டன்மொத்தலறைதலேயலைத்தலெற்றல்
யிடித்தனாதுக்கன்மோதல்பேசியவழுக்கலென்ப
வடித்தலேவசமாக்கற்பேர்மழித்தன்முண்டிதமேயாக்கல். (௯௰)

அவித்தல்பாநீடுபெய்தலாமுப்பேர்செறித்தலென்ப
றுளைத்தலின்பேர்திளைத்தல்குயிறலாந்தொள்ளலும்பேர்
வளைத்தலேகவர்தல்வெளவல்வாருதல்கொளலுமாகுங்
கிளைத்தல்காற்குறைகொண்டிகேடுறங்கொள்ளையாமே. (௯௧)

வருடலைவரலெநீவல்வருமுப்பேர்தடவலாகும்
விரியலேபரத்தலென்பவிளம்புபாரித்தலும்பேர்
தெரியவேதோண்டஞெண்டல்சேரவேமுகத்தலின்பேர்
சொரிதலேபொழிதறூவறுயல்வரலசைதலின்பேர். (௯௨)

திதியலெபெறுத்தனோக்கல்சிறப்பொடுபுரத்தனுங்கும்
விதமுடனகாத்தலின்பேர்வேலியேயேமஞ்சேமங்
கதவரண்காப்புத்தட்டிகடியெட்டுங்காவற்பேரோ
பதமுறவேரம்பல்போற்றல்பாதுகாத்தற்பேராகும். (௯௩)

பகுத்தலேபாத்தல்பாகம்பங்கேபாதியும்பே
ரிருத்தலெவிரித்தலின்பேரொற்றிடம்பொதிதல்வீக்க
மிசைப்படப்புதைத்தலின்பேர்தணித்தல்சேமித்தலென்ப
நிகைக்கவேயணைத்தல்குற்றமெறுதலென்பதுநெரித்தல். (௯௪)

ஙருக்கல்காதல்சவட்டலெற்றுதலொழித்தல்கோறன்
முருக்கல்வீட்டுதல்படுத்தன்முதிர்கொலைசெய்தலொன்பா
னுரைத்தமாரணமுமப்பேருறுகோளணங்குவேட்டம்
விரித்திடிற்கொலையினற்பேர்வேட்டையாபத்தியென்ப. (௯௫)

குடகமெய்கொட்டிக்கையைக்குவித்தலினுமந்தானே
கடுகியநாடனேடல்கையரிக்கொளலேதேட
லொருடர்புறாருவுமாகுந்துவட்டலேநடக்கலென்ப
தொடுதலேதிவளலாறுபரிசநத்துவளலும்பேர். (௯௬)

குத்தலின்பெயர்—புடைத்தல்-ஏதிதல்-எற்றல். ஆ ௩.] அடித்
தலின்பெயர்—கொட்டல்-மொத்தல் அறைதல் -அகைத்தல்-எற்
றல்-அதுக்கல்-மோதல்-வழுக்கல் ஆ ௮.] வசமாக்கலின்பெய
ர்—வடித்தல். (௧)] முண்டிதமாக்கலின்பெயர்—மழித்தல். (௧)

செறித்தலின்பெயர்—அளித்தல்-யாதிடு-பெய்தல். ஆ ௩.] து
ளைத்தலின்பெயர்—திளைத்தல்-குயிறல்-தொள்ளல். ஆ ௩.] வாரு
தலின்பெயர்—வளைத்தல்-கவர்தல்-வெளவல்-கொளல். ஆ ௫.
கொள்ளையின்பெயர்—சூறை-கொண்டி. ஆ ௨.

தடவலின்பெயர்—வருடல் - தைவரல்-நீவல். ஆ ௩.] பாத்தலி
ன்பெயர்—விரியல்- பாரித்தல். ஆ ௨.] முகத்தலின்பெயர்—
தோண்டல்-நோண்டல். ஆ ௨.] தூவலின்பெயர்—சொரிதல்-
பொழிதல். ஆ ௨.] அசைதலின்பெயர்—துயல்வரல். (௧)

காத்தலின்பெயர்—திதி - நிலைபெறுத்தல் - நோக்கல் - புரத்தல்.
ஆ ௪.] காவலின்பெயர்—வேலி - ஏமம் - சேமம் - கதவு - அர
ண் - காப்பு - தட்டி - கடி. ஆ ௮.
பாதுகாத்தலின்பெயர்—ஓம்பல்-போற்றல். ஆ ௨.

பங்கீட்டின்பெயர்—பகுத்தல்- பாத்து - பாகம்-பாதி. ஆ ௪.
விரித்தலின்பெயர்—இருத்தல். (௧)] பொதிதலின்பெயர் — வீக்
கம். (௧)] புதைத்தலின்பெயர்—தணித்தல்-சேமித்தல். ஆ ௨.
குற்றலின்பெயர்—அவைத்தல். (௧)] நெரித்தலின்பெயர்—நெ
றுதல். (௧)

கொலைசெய்தலின்பெயர்—ஏருக்கல்-காதுதல்-சவட்டல்-எற்றுத
ல்-ஒழித்தல்-கோறல்-முருக்கல்-வீட்டுதல்-படுத்தல் - மாரணம்.
ஆ ௰.] கொலையின்பெயர்—ஊறு-கோள்-அணங்கு-வேட்டம்.
ஆ ௪.] வேட்டையின்பெயர்—பாபத்தி. (௧)

மெய்கோட்டிக்கைகுவித்தலின்பெயர்—குடகம். (௧)] தேடலி
ன்பெயர்—நாடல்-நேடல்-மையரிக்கொளல் - துருவு. ஆ ௫.
துவட்டலின்பெயர்—நுடக்கல். (௧)] தொடுதலின்பெயர்—திவ
ளல்-ஊறு-பரிசநம்-துவளல். ஆ ௫.

கடத்தலேபடர்தல்சேறல்கழிதலேயிறைறலேகல்
விடுத்திடலிறத்தல்போகன்மென்மெலவழங்கனிங்க
நடத்தினிற்செலவேயில்லறணத்தலேயியங்கனீர்த்
ணடத்தலின்பேரொட்டாமொழுக்குமுநாட்டுமப்பேர். (௫௭)

மிதித்திடறுகளல்பாய்தல்விரைவுடனேபுகுக்கல்
குதித்தலின்பேரோதாண்காங்குப்புறவிடவுமப்பேர்
கதித்தலேபசைத்தல்பம்பல்குறப்பலபொலிவுபாய்ச்ச [(௫௮)
விதந்திடனெறுக்கலேர்பெண்ணெறட்டிமேயெழுச்சியின்பேர்.

கடுமைமேகத்துவுக்லைதணமேகரிதமொல்லை
படைவுளவாறுபெருக்கெடுப்பெணகறையலாகு
முடுகலேனைசயேதகாமுந்தியகவனம்வேகஞ்
சடுதிசீக்கிரமேயீண்டேவிரைவின்பேர்விருப்புஞ்சாற்றும். (௫௯)

ஆயெனலொடுபொன்னென்றலானகுத்திரமேசண்ட [டல்
நொய்யென்றல்கதுமென்றிட்டெனுடியினிற்பொருக்கென்றிட்
டெய்தென்றனெருள்ளல்சோரங்கிணாவினிற்குறிப்புப்பத்தா
மொய்யெனலொடுமெல்லென்றல்மடியெனருழ்துன்மந்தம் (௬௰)

கொருமரன்மறுக்கலோடேயல்மரதிரிதல்கொட்கல்
சொரிதலேசூர்த்தலோடுபிமரிசுழலலெட்டாம்
பரிசரிதாவல்சேறல்பாறுதலேவன்மீளல்
வரிசையிற்றுண்டறத்தல்வாவருவுதல்கடத்தல். (௬௧)

நீதியிற்பாறலோடணியிர்தலீளுதலுமப்பே
ராதியேவீதிபெண்பவிருபெயரிவைநேரோடன்
மாதிசாரிகைபேசுற்றுவாளிமண்டிலமாவோட
லோதியபவனிபொன்றேயுலாப்போதலாகுமென்ப. (௬௨)

மருவுதலணைதல்சார்தன்மற்றையவணுகல்புல்லல்
மருகுறல்கிணைதுன்னலன்னனெலொன்பான்பேர்கிட்ட
லொருவுதலறத்தல்வல்லியுணர்வொடுதணப்புநீங்கல்
வொருமுறையுலாவலின்பேர்வழங்கலோடசைதலாமே. (௬௩)

நடத்தலின்பெயர்—கடத்தல்-படர்தல்-சேறல்-கழிதல்-இவறல்-ஏகல்-விடுத்திடல்-இறத்தல்-போகல்-வழங்கல்-நீங்கல்-செலவு-இல்லல்-தணத்தல்-இயங்கல்-தீர்தல்-ஒதுக்கம். ஆ௰௭.

குதித்தலின்பெயர்—மிதித்திடல்-உகளல் பாய்தல்-உறுக்கல்-குப்புறல். ஆ௫.] எழுச்சியின்பெயர்—கதித்தல-அகைத்தல்-டம்பல்-கருறல்-பொலிவு-பாய்ச்சல்-ஒதுக்கல்-எர்பு. ஆ௯.

கடுப்பின்பெயர்—கடுமை-கதழ்வு-வல்லை-கதநம்-துரிதம்-ஒல்லை. ஆ௬.] விரைவின்பெயர்-முடுகல்-விசை-தாரை-கவநம்-வேகம்-சடிதி-சீக்கிரம்-ஈண்டு-விதுப்பு. ஆ௰.

விரைவுக்குறிப்பின்பெயர்—ஐயெனல்-பொள்ளென்றல்-குத்திரம்-சண்டம்-நொய்தென்றல்-கதுமென்றிட்டல்-பொருக்கென்றிட்டல்-வெய்தென்றல்-ஞெள்ளல்-கோரம். ஆ௰.] மந்தத்தின்பெயர்—மொய்யெனல்-மெல்லென்றல்-பையெனல்-தாழ்தல்.] ஆ௪.

சுழலலின்பெயர்—தெருமரல்-மறுகல்-அலமரல்-திரிதல்-கொட்கல்-சொரிதல்-சூர்த்தல்-பிரமரி. ஆ௮] கடத்தலின்பெயர்—பரிகரி-தாவல்-சேறல்-யாறுதல்-ஒவல்-மீளல்-தாண்டல்-தத்தல்-வாவல்-தாவுதல்.] ஆ௰.

ஓடலின்பெயர்—பாறல்-நிமிர்தல்-நீளுதல். ஆ௩.] நேரோடலின்பெயர்—ஆதி-வீதி. ஆ௨.] மண்டிலமாவோடலின்பெயர்—மாதி-சாரிகை-சுற்று-வாளி. ஆ௪.] உலாப்போதலின்பெயர்—பவனி.] ஆ௧.

இட்டலின்பெயர்—மருவுதல்-நண்ணல்-சார்தல்-அணுகல்-புல்லல்-அருகுறல்-சிவணல்-துன்னல்-அண்ணல். ஆ௯.] நீங்கலின்பெயர்-ஒருவுதல்-துறத்தல்-வல்லி-உணர்வு-தணப்பு. ஆ௫.] உலாயலின்பெயர்,—வழங்கல்-அசைதல்.] ஆ௨.

நடவலையுகைத்தலெய்தனலமொடு தூண்டலூர்தல்
கடவலையகைத்தலுய்த்தல்கடிதோட்டல்செலுத்தலொன்பா
னுடனூராய்ப்போதலின்பேருரிஞ்சலோடுரோஞ்சலாகும்
படியவேநெகிழ்தலொல்கலிருபெயர்குழைவின்பாலாம். (௪௪)

ஆற்றறுத்தற்பேர்தானையாம்வலியழித்தலென்ப
வாற்றியவழிப்படுத்தற்பெயராற்றுப்படையென்றாகு
மேற்றல்போதரலெனுஞ்சொல்லெதிர்கொடுபோதலென்ப
மாற்றியவுழுதலோடுமடித்தலையுழக்கலாகும். (௪௫)

முரண்வினைசமரேயார்ப்புமொய்தும்பைஞாட்புத்தாக்குச்
செருமறல்காளபங்கள்சினவலையமர்மலைப்போ
டாணமாகவநிகர்த்தலிகலேவெஞ்சமமுடன்றல்
பொருதல்சங்கிராமந்தெவ்வுப்பூசலாயோதநம்போர். (௪௬)

முட்டுதலுடனேதாக்கறலைப்படன்முடுகலேற்றல்
கிட்டலேயெதிர்தலாகுங்கிடைத்தலுமதன்பேர்தானை
யொட்டலர்நாட்டழித்தலுற்றபேர்கொற்றவள்ளை
யொட்டினர்மேற்சாராமையுரைத்தபேர்தழிஞ்சியாமே. (௪௭)

நடநட்டநடநம்வாணிநாடகநிருத்தந்தூக்குப்
படிதநாட்டியமேகண்ணுள்பத்துந்தாண்டவமுங்கூத்தா
நடையுநட்டணமுமப்பேர்நடித்திடல்பெயர்தலால
லடைவிலேயகவலுங்கலசைவொடாறிவையாடற்பேர். (௪௮)

பிரமரிவீரட்டாநம்பேசிலுப்பிதமலைப்புப்
புரியமேயிலயமற்றும்போற்றுமுள்ளாளத்தோடு
கரணமேபரதமொன்பான்கருதுகூத்தின்விகற்பம்
பருமித்தல்சிரமஞ்செய்தல்பழகலேயுழத்தலென்ப (௪௯)

கொடுகொட்டிபாண்டரங்கங்கூறுகாபாலமூன்றும்
பொடியணிசிவனிருத்தம்போற்றியபரவைசெய்யாள்
குடமல்லோடல்லியந்தான்கொண்டல்வண்ணன்றன்கூத்தாங்
குடையொடுதுடியிரண்டுங்குமரனதாடலாமே. (௫௰)

செலுத்தலின்பெயர்— நடவல்-உகைத்தல்-ஏய்தல்- தூண்டல்-ஊர்தல்-கடவல்-அகைத்தல்-உய்த்தல்-ஓட்டல். ஆ௲கூ.] உராய்ப்போதலின்பெயர்—உரிஞ்சல்-உரோஞ்சல். ஆ௲உ.] குழைவின்பெயர்—நெகிழ்தல்-ஒல்கல்.] ஆ௲உ.

ஆற்றறுத்தலின்பெயர்—வலியழித்தல். (க)] வழிப்படுத்தலின்பெயர்—ஆற்றுப்படை. (க) எதிர்கொடுபோதலின்பெயர்—எற்றல்-போதரல். ஆ௲உ.] உழக்கலின்பெயர்—உழுதல்-மடித்தல். ஆ௲உ.

போரின்பெயர் —முரண்-வினை-சமர்-ஆர்ப்பு-மொய்-தும்பை-ஞாட்பு-தாக்கு-செரு-மறல்-காளபம்-சினவல்-அமர்-மலைப்பு-இரணம்-ஆகவம்-நிகர்த்தல்-இகல்-வெஞ்சமம் உடன்றல்- பொருதல்-சங்கிராமம்-தெவ்வு பூசல்-ஆயோதநம்.] ஆ௲உரு.

எதிர்தலின்பெயர்—முட்டுதல்-தாக்கல் - தலைப்படல் - முடுகல்-எற்றல்-கிட்டல் கிடைத்தல். ஆ௲எ.] ஒட்டலர்நாடழித்தலின்பெயர்—கொற்றவள்ளை. (க)] ஒட்டினர்மேற்சாராமையின்பெயர்—தழிஞ்சி. ஆ௲க.

கூத்தின்பெயர்—நடம்-நட்டம்-நடநம்-வாணி-நாடகம்-நிருத்தம்-தூக்கு-படிதம்-நாட்டியம்-கண்ணுள்-தாண்டவம்-நடை-நட்டணம்- ஆ௲௰ரு.] ஆடலின்பெயர்—நடித்திடல்-பெயர்தல்-ஆலல்-அகவல்-தூங்கல்-அசைவு. ஆ௲கூ.

கூத்தின்விகற்பத்தின்பெயர்—பிரமரி - வீரட்டாநம்- உப்பிதம்-மலைப்பு-புரியம்- இலயம் - உள்ளாளம்-கரணம்- பரதம். ஆ௲௯ சிரமஞ்செய்தலின்பெயர் — பருமித்தல். ஆ௲க.] பழகலின்பெயர்—உழத்தல். (க)

சிவனிருத்தத்தின்பெயர்— கொடுகொட்டி- பாண்டரங்கம்-காபாலம். ஆ௲ரு.] திருமகளாடலின்பெயர்—பாவை. (க) ]கொண்டல்வண்ணன்கூத்தின்பெயர்—குடம்-மல்-அல்லியம். ஆ௲ரு. குமரனாடலின்பெயர்—குடை-துடி. ஆ௲உ.

துடியென்பதெழுவர்மாதர் தூங்கலினுமமாகுங்
கடையமேபயிராணிக்குக்காட்டிய நாட்டியப்பேர்
வடிவமைதர்க்கை தாக்குமற்றதுமரக்காலென்ப
நெடியகாமன்கொண்டாடு நிருத்தமேவிதித்தபேடாம். (௫௧)

அடுத்திடும்வெறிகழங்கோடணங்கிவைவெறியாட்டின்பேர்
தொடுத்தகைகோத்தாடற்பேர்சொல்லியகுரவையென்ப
முடக்கியவிருகைதானும்பழுப்புடைமுறையேயொற்றித்
துடக்கிய நடையினுமந்துணங்கையென்றியம்பலாமே. (௫௨)

குடந்தங்கைகூப்பிமெய்யைக்கோப்பொடுகொட்டிநிற்றல்
குடங்கையைக்குவித்துக்கொட்டல்கொம்மைகொட்டுதலென்று
மடர்ந்துவாய்கையாற்கொட்டலாவலங்கொட்டலென்ப [கு
படங்குந்திநிற்றலின்பேர்பகரிற்குஞ்சித்தலாமே. (௫௩)

வட்டித்தலொற்றறுத்தல்வட்டணையுடனேமற்றுந்
தட்டலென்றிந்தநான்குஞ்சாற்றிடிலொருபேர்தானே
கிட்டியதாளவொற்றுக்கிளந்தபேர்சதியேசொன்
றிட்டபேரிரண்டுமாமென்றியம்பினர்வியந்தநூலோர். (௫௪)

உவளித்தறூய்மைசெய்தலுபலாளநத்தின்பேரோ
யிவர்தலேடீக்கோளென்பவிரண்டுமேறுதலினமை
மவாமற்றுமிறங்குதற்பேர்சுதமவதாரமாகு
மவுநப்பேர்மூகமோநம்வாளாகேளாவென்றுமே. (௫௫)

திறையொடுமிறையேகப்பந்தெவ்வர்பாகுடத்தின்பேரோ
கறைகடன்வரியிறுப்புக்கரங்குடியிறையைந்தபேர்
துறைபடுமுல்கேயாயஞ்சுங்கஞ்சாரிகையுமாகு
நெறியொடுவலித்தலொட்டனோலையுடன்பாடென்ப. (௫௬)

முயற்சிதாளாண்மையூக்கமுந்துதாளுத்தியோக
மியற்றலேயுஞற்றுழப்போடாள்வினையிவையுற்சாகம்
வியக்குமூராண்மையொன்றேமிகவோங்கிச்சேறலாகு
நயக்கும்பேராண்மையொன்றேநட்டவருழைசெய்தல் (௫௭)

ூவகைமாதராடலின்பெயர் — துடி (க)] அயிராணியாடலின்
பயர் — கடையம் (க) ]துர்க்கையாடலின்பெயர் — மரக்கா
(க) காமனுடலின்பெயர்—பேடு. (க)

வறியாட்டின்பெயர்—வெறி - களங்கு-அணங்கு ஆ ௩ ] கை
காத்தாடலின்பெயர் — குரவை (க)] முடக்கியவிருகைபழுப்
டையொற்றியாடலின்பெயர்—துணங்கை. (க)

கூப்பிமெய்கொட்டிநிற்றலின்பெயர்— குடந்தம் (க)] குட
கையைக்குவித்துக்கொட்டலின்பெயர்— கொம்மை (க)] வ
கையாற்கொட்டலின்பெயர் —ஆவலங்கொட்டல் (க)
ந்திநிற்றலின்பெயர்.—குஞ்சித்தல். (க)

ட்டித்தல்—ஒற்றறுத்தல் - வட்டணை - தட்டல் - இவைநான்கு
மாருபொருட்கிளவி- தாளவொற்றின்பெயர்—சதி-சீர். ஆ உ.
பலாளநத்தின்பெயர்—உவளித்தல் - தூய்மைசெய்தல் ஆ உ.

றுதலின்பெயர்— இவர்தல் - மீக்கோள் ஆ உ] இறங்குதலின்
பெயர்—சுதம் - அவதாரம் ஆ உ] மவுநத்தின்பெயர் — மூகம்
மோனம்-வாளா-கேளா. ஆ ச.

தவ்வரியாகுடத்தின்பெயர்—திறை-மிறை - கப்பம் ஆ ௩] கு
டியிறையின்பெயர்—கறை-கடன்-வரி-இறுப்பு-கரம் ஆ ரு] சு
ங்கவிறையின்பெயர்—உல்கு-ஆயம்-சாரிகை ஆ ௩] உடன்பாட்
டின்பெயர்—வலித்தல்-ஒட்டல்-நேரல். ஆ ௩.

உற்சாகத்தின்பெயர்—முயற்சி - தாளாண்மை-ஊக்கம்-தாள்-உ
த்தியோகம்-இயற்றல்-உஞற்று- உழப்பு - ஆள்வினை - ஆ ௯] மி
க்கசெயலின்பெயர்—உளராண்மை(க) அருமைசெய்தலின்பெ
யர்—பேராண்மை (க)

கரப்பொடுகட்டல்பட்டிகரவடங்கயவுகள்ளந்
திருட்டொடுபெடிறுசோரந்தேயமுங்களவினாந்தாம்
விரித்திடுந்தேறுவோடுசெவுரியமீண்டுமப்பேர்
தரித்தசம்பிரதமென்பதக்கதாஞ்சித்தின்பேரே. (௫௮)

தரித்தலேபொறுத்தலோடுதாங்குதல்சுமத்தலின்பேர்
பரித்தலுமாகுமென்பபருவரலருவலின்பேர்
தெரித்தொன்றைவனாவேநீக்கறெற்றலேமாறுபாடாம்
விரித்திடுந்தைப்பெயத்துமேவியபொல்லந்துன்னம். (௫௯)

சுறுக்கெனச்சுடல்சந்தாபந்துபிதயிருபேர்சொல்லு
மறைப்பேயாவரணமாகுமாய்தலுமப்பேர்தானே
நெறிப்படவழுந்துதற்பேர்ஞெமுங்குதலென்றுகூறு
மிறைத்தலேயலைத்தல்சாலவேதனையுலைப்புமப்பேர். (௬௰)

நாம்பலேபழங்கணோடுநாட்டியமெலிவுஞொள்க
நேம்பலேகிருசம்போதச்சிக்கலேழினைத்தலின்பேர்
சாம்பலேசூம்பலென்பவிருபெயரொடுங்கல்சாற்று
மேம்படச்சொல்லுகின்றமேற்கோளேபூட்கையென்ப. (௬௧)

வருட்டலேதெருட்டலின்னவற்புறுத்தற்பேர்தானே
யுருத்தலேநாறலேறுற்றன்றூளைத்தலாம்பொடித்தலும்பேர்
விரித்திடலெதிர்தல்விள்ளலவிழ்தலேயலர்தலாகுந்
தரிப்பறநூக்கலூன்றலேனறலுந்தள்ளன்முப்பேர். (௬௨)

முறுவலேநகையேயார்ப்புமாலேயிளியேயாக
மதிவொடுசிரித்தலாறயசியவமதிச்சிரிப்பாங்
குறியொடுவிடல்வியோகங்கூடலேயோகமென்ப
மறலரிலபரமோடெவுருந்துவக்கிவைபிணக்காம். (௬௩)

விற்றற்பேர்பகர்தல்கூறல்விலைநொடைமாறலைந்தா
மொற்றுமைகுறிக்கோளென்பவொற்றுவேய்சொற்றபேரே
யிற்றிவைநிற்கமற்றைறயினைதலைக்காவற்பேரோ
பெற்றிடல்பயத்தல்வாய்த்தல்கிடைத்தலாம்பேசுமுப்பேர். (௬௪)

களவின்பெயர்—கரப்பு-கட்டல்-பட்டி-கரவடம்-களவு-கள்ளம் திருட்டு-படிறு-சோரம்-தேயம்-தேறு-சவுரியம் ஆக௰௨] சித்தின்பெயர்—சம்பிரதம் (௧)

சுமத்தலின்பெயர்—தரித்தல்-பொறுத்தல் - தாங்குதல் - பரித்தல் ஆக௪] அருவலின்பெயர்—பருவரல் (௧)] நீக்கலின்பெயர்—வரைவு (௧)] மாறுபாட்டின்பெயர்—தெற்றல் (௧)] தைத்தலின்பெயர்—அத்து-பொல்லம்-துன்னம். ஆக௩.

சுடலின்பெயர்—சந்தாபம் - தூபிதம் ஆக௨] மறைப்பின்பெயர்—ஆவரணம்-மாய்தல் ஆக௨] அழுந்துதலின்பெயர்—ஞெமுங்குதல் (௧) உலைப்பின்பெயர்—மிறைத்தல் - அலைத்தல் வேதனை ஆக௩.

இளைத்தலின்பெயர்—நாம்பல் - பழங்கண் - மெலிவு- ஞொள்கல்-தேம்பல்-கிருசம்-சிக்கல்ஆக௭]ஒடுங்கலின்பெயர்—சாம்பல் - கூம்பல் ஆக௨] மேற்கோளின்பெயர்—பூட்கை. (௧)

வற்புறுத்தலின்பெயர்—வருட்டல்-தெருட்டல் ஆக௨] முளைத்தலின்பெயர்—உருத்தல்-நாறல்-தோற்றல் - பொடித்தல் ஆக௪ அலர்தலின்பெயர்—விரித்திடல் - எதிர்தல் - விள்ளல் - அவிழ்தல்ஆக௪]தள்ளலின்பெயர்—நூக்கல்-ஊன்றல்-நோன்றல்ஆக௩.

சிரித்தலின்பெயர்—முறுவல்-நகை-ஆர்ப்பு - மூரல் - இளி-ஆசம் ஆக௬] அவமதிச்சிரிப்பின்பெயர்—அசி(௧)] விடலின்பெயர்—வியோகம்(௧] கூடலின்பெயர்—யோகம் (௧)] பிணக்கின்பெயர்—மறல்-அரில்-அபரம்-துவக்கு. ஆக௪.

விற்றலின்பெயர்—பகர்தல்-கூறல்-விலை-நொடை மாறல் ஆக௫ ஒற்றுமையின்பெயர்—குறிக்கோள் (௧)] ஒற்றின்பெயர்—வேய் (௧)] தலைக்காவலின்பெயர்—இளை (௧)] கிடைத்தலின்பெயர்—பெற்றிடல்-பயத்தல்-வாய்த்தல். ஆக௩.

முளித்தலேவறத்தலோடுமுதிர்ந்திடலுலரல்காய்தல்
பிளிற்றலேபில்கல்காலலுமிழ்தல்கொப்பளித்தற்பேரே
தளர்ச்சியாமறைபுகற்பேர்சரண்புகலாகுமென்ப
விளக்கியவியங்கோளேவல்வீதென்பவறுமையாமே. ௬௫

அலைசலேஞெகிழ்தல்ஞொள்கலலையலேயாஞ்சியும்பே
ருலைவுறுசொறிகண்டேதினவெனவிருபேரோதுங்
கலைவலேயளாவலோடுகலம்பகமேகலாவ
றலைபெறுமின்னசங்கீரணமைந்துந்துழாவலின்பேர். ௬௬

விம்மியேயுமிழ்தல்கான்றல்மேவுமுற்காரஞ்சத்தி
நம்மலேகுவாசமூச்சாங்கொட்டாவியேயாவித்த
லம்மவிச்செயல்பற்றும்பேர்க்கறுபத்தேழ்விருத்தஞ்செய்தான்
மைம்முகிற்குணபத்திரன்றாள்வணங்குமண்டலவன்றனே. ௬௭



ஒன்பதாவது செயல்பற்றிய பெயர்த்தொகுதி
முற்றிற்று.



காய்தலின்பெயர்—முளித்தல் - வறத்தல் - முதிர்ந்திடல் - உலர ்ல் ஆக ௪] கொப்பளித்தலின்பெயர்—பிளிற்றல் - பில்கல் - காலல்- உமிழ்தல் ஆக ௪] மறைபுகலின்பெயர் — சரண்புகல் (௧)] ஏவலி ன்பெயர்—வியங்கோள் (௧)] வறுமையின்பெயர்—வீது. (௧)

அலையலின்பெயர் — அலைசல் - ஒருகிழ்தல் - ஞொள்கல் - ஆஞ் சி ஆக ௪] சொறியின்பெயர்—கண்டூதி-தினவு ஆக ௨] துழாவலி ன்பெயர்—கலவல்-அளாவல் - கலம்பகம் - கலாவல் - சங்கிரண ம். ஆக ௫.

சத்திசெய்தலின்பெயர்—உமிழ்தல் - கான்றல்-உற்காரம் ஆக ௩] மூச்சின்பெயர்— தும்மல் - சுவாசம் - ஆக ௨] கொட்டாவியின்பெ யர்—ஆவித்தல். (௧)



பத்தாவது

# ஒலிபற்றியபெயர்த்தொகுதி.

## காப்பு.



வலியுற்றவெவ்வினைப்பேர்மாற்றியேயதந்தனுநம்
பொலியுற்றகேவலப்பெண்புணர்ந்துவீற்றிருந்தபோதன்
மலருற்றுநடந்தவாமன்மனாபுனாபாதம்போற்றி
யொலிபற்றும்பெயர்க்கூட்டத்தையுணர்த்துவமியப்பாற்கேண்மி
[ன். (க)



மாற்றமேமொழியேநோவாணியேகதையெதிர்ப்புக்
கூற்றுரைபனுவலேசொற்குயில்விளக்கிளவிகாதை
யேற்றிடுநொடியியத்தோடிசைபறைவாக்குப்பாணி
தோற்றமாறுவலிதோடுமூவேழுஞ்சொல்லின்பேரே. (௨)

வசித்தல்பாசுரமேவார்த்தைவாசகம்வசநமும்பேர்
திசைப்படுமுரையேபாழிசிதைவிலாப்பதமென்றோது
மிசைத்தலேபிதற்றல்பேசலியம்புதலிறுத்தலும்பேர்
விசைப்பின்மீதுரையேபல்காவிளம்புதலாகுமென்ப. (௩)

பழிச்சலேத்துதறுதித்தல்பரசுதல்பரவல்போற்றல்
வழுத்தலேத்திரமேமெச்சல்வாழ்த்தலாந்துதியுமேற்கு
மழிப்பிலாவாசிவாழ்த்தேயாசிடையென்றுங்கூறும்
பழிச்சொலேசிறுசொற்சொற்பரிவாதம்பழித்தலென்ப. (௪)

விரித்தலேக்கைத்தலேர்டுமிழற்றுதல்விளம்பல்கூற
லுரைத்தலேநொடித்தல்சாற்றலோதுதல்குயிறல்சொற்ற
றெரித்தலேநவிலலோடுவலித்திடல்செப்பலாட்டல் (௫)
பரப்புடன்மொழிதலோடுபணித்தல்பன்னெட்டுஞ்சொல்லல்.

சாதம்வாய்வாய்மையாணைசத்தியந்திடம்வெளாண்மை
நீதியாநிலைமைமன்றநிச்சயம்பத்துமெய்ப்பேர்
வார்த்தையாமிச்சைதள்ளல்வலக்காரம்வழுதிபெட்டிச்
சாதனைமாயம்வஞ்சஞ்சடம்பிசிபட்டிறுபொய்ப்பேர் (௬)

படித்தல்வாசித்தலோதல்பாடலத்தியயநமும்பேர்
பிடித்தொன்றைவிடாதபேசல்பிதற்றுதலென்றுபேரோ
யிடக்கரோமறைத்தசொற்பேரொன்பகூசநமுமாமே
யிடித்தலேகழறலென்பவிருபெயருறுதிச்சொல்லே. (௭)

அம்பலேகவ்வையேசலவர்பழிமொழிநாற்பேரோ
யம்பலேசிலரறிந்திட்டதுபுறங்கூறலாகு
மம்புவிப்பலருந்தூற்றுமம்மொழியலரோவென்ப
வெம்பியபெருஞ்சொல்லென்பமிகப்பலரறிசொல்லாமே. (௮)

சொல்லின்பெயர்—மாற்றம்-மொழி-கிர்-வாணி-கதை-கிளப்பு-கூற்று-உரை-பனுவல்-சொல்-குயில்-விருத்தம்-கிளவி-காதை-நொடி-இயம்-இசை-பறை-வாக்கு-பாணி-நுவல். ஆ உச.

வாசகத்தின்பெயர்—வசித்தல்-பாசுரம்-வார்த்தை-வசநம். ஆ ச பதத்தின்பெயர்—உரை-பாழி. ஆ உ.] இயம்புதலின்பெயர்—இசைத்தல்-பிதற்றல்-பேசல்-இறுத்தல். ஆ ச.] பல்காலிசைம்புதலின்பெயர்—மீதுரை. (க)

வாழ்த்தலின்பெயர்—பழிச்சல்-ஏத்துதல்-துதித்தல்-பரசுதல்-பரவல்-போற்றல்-வழுத்தல்-தோத்திரம்-மெச்சல்-துதி. ஆ ய வாழ்த்தின்பெயர்—ஆசி-ஆசிடை. ஆ உ.] பழித்தலின்பெயர் பழிச்சொல்-சிறுசொல்-தீச்சொல்-பரிவாதம். ஆ ச.

சொல்லலின்பெயர்— விரித்தல்-கதைத்தல்-பிழற்றுதல்-விளம்பல்-கூறல்-உரைத்தல்-நொடித்தல்-சாற்றல்-ஓதுதல்-குயிறல்-சொற்றல்-தெரித்தல்-நவிலல்-வலித்திடல்-செப்பல்-ஆடல்-மொழிதல்-பணித்தல்- ஆ யஅ

மெய்யின்பெயர்—சாதம்-வாய்-வாய்மை-ஆணை-சத்தியம் திடம்-வேள்ளாண்மை-நிலைமை-மன்ற-நிச்சயம்-ஆ ய.] பொய்யின்பெயர்—மிச்சை-தள்ளல்-வலக்காரம்-வழுது-பெட்டு-சாதனை-மாயம்-வஞ்சம்-சடம்-பிசி-படிறு- ஆ யக.

படித்தலின்பெயர்—வாசித்தல்-ஓதல்-பாடல்-அத்தியயநம்-ஆ ச.] விடாதுபேசலின்பெயர்—பிதற்றுதல் (க) மறைத்தசொல்லின்பெயர்— இடக்கர்-கூகநம்-ஆ உ.] உறுதிச்சொல்லின் பெயர்—இடித்தல்-கழறல். ஆ உ

பழிமொழியின்பெயர்—அம்பல்-கவ்வை-ஏசல்-அலர். ஆ ச. அம்பலென்னும்பெயர்—சிலரறிந்துபுறங்கூறல்-அலரென்னும் பெயர்—பலருந்தூற்றல். பெருஞ்சொல்லென்னும்பெயர்—பனிதிசொல்.

மழலையேகுதலைகொஞ்சல்வினவுமுல்லாபமூற்ற
மழலையேயொற்றுநீங்கிவழுப்படத்திரம்பாமென்சொல்
பிழைபடுங்கொடுவாய்குஞ்சம்பிசுநங்கொண்டியந்தொடுப்பு
விழைவிலாக்குறளையாறும்வெறும்புறங்கூற்றின்பேரே. (௯)

வழுவிலாச்சபதமாணைவஞ்சினமொடுவட்டித்த
நழுவியபிராமாணஞ்சூள்சத்தியம்விரதமும்பேர். [ல்லும்பேர்
மொழிமைமூதுரைமுன்சொல்லுமுதுசொல்லும்பழஞ்சொ
பழமொழிமுதுமையாகும்படுங்கதைகாரணச்சொல். (௰)

தரித்திடுந்திசைச்சொலென்பசாருந்தேசிகமென்றாகும்
விரிச்சியேவாய்ப்புளென்பமிக்கநற்சொன்னிமித்த
மரிப்புறப்பொரவழைத்தலறைகூவலாகுமென்ப
வுரைத்திடுமுகமன்மற்றையுபசாரநயஞ்சம்மானம். (௰௧)

வினாவலேகடாவலாகும்விடையதற்கெதிர்மொழிப்பேர்
வினாவொடுவிடையுங்கூடிவிரும்பியபொருள்சல்லாபந்
தனாதுமேம்பாட்டுரைப்பேர்தானெடுமொழியென்றாமே
யினாநகைநயச்சொலென்பவெய்துமேயசதியாடல். (௰௨)

கடைப்பிடியோர்ப்புவேறுகாட்டியகுறிக்கோடேற்ற
மடுத்தநற்பொருளிலாமையநத்தமேயாகுமென்ப
வெடுத்தவாளாவெனுஞ்சொலிறுசேளாவாகுமென்ப
கொடுத்திடும்புநருத்தந்தான்கூறியகூறலாமே. (௰௩)

கூவலேயுளைத்தலோடுகுறுகவேயிருத்தல்கேதல்
வாவெனல்களைதலேயாகருடணையொடுவிளித்தன்
மேவுமற்றகவல்லான்பான்வினவியேயழைத்தற்பேரே
யாவலாற்கிழத்தலறைபோதலாகுமென்ப. (௰௪)

தோற்றஞ்சீர்சுலோகமெய்ப்பேசொன்மாலைநாற்பேர்சொல்லு
மேற்றமேம்பாதமென்பவியன்றமேம்பாட்டினமை
ஏற்றமாஞ்சீர்த்திகீர்த்தியொளிபுகழ்மீக்கூற்றும்பேர்
மேற்றிகழ்சீர்த்திகீர்த்திமிகுபுகழிருபேர்தானே (௰௫)

தீம்பாமென்சொல்லின்பெயர்— மிழலை-குதலை - கொஞ்சல்- உல்லாபம்- மழலை- ஆ ரு.] புறங்கூறலின்பெயர் — கொடுவாய்-குஞ்சம்-பிசுநம்-கொண்டியம்-தொடுப்பு- குறளை- ஆ சு.

சத்தியத்தின்பெயர்— சபதம் - ஆணை - வஞ்சினம் - வட்டித்தல் - பிரமாணம்-சூள்- விரதம் - ஆ எ.] மூதுரையின்பெயர்— மொழிமை-முன்சொல்-முதுசொல் - பழஞ்சொல் - ஆ ச. பழமொழியின்பெயர்—முதுமை-(க)] கதையின்பெயர்— காரணச்சொல். (க)

திசைச்சொல்லின்பெயர்—தேசிகம்- (க)] நிமித்தத்தின்பெயர்—விரிச்சி-வாய்ப்புள்- ஆ உ.] பொரவழைத்தலின்பெயர்— அறைகூவல்- (க)] சம்மானத்தின்பெயர்—முகமன்-உபசாரம்- நயம்- ஆ ௩.

வினவலின்பெயர்—கடாவல்- (க)] எதிர்மொழியின்பெயர்— விடை-(க)] வினவும்விடையுங்கூடியபொருளின்பெயர்—சல்லாபம் - (க)] மேம்பாட்டுரையின்பெயர்—நெடுமொழி- (க) அசதியாடலின்பெயர்—நகை-நயச்சொல்- ஆ உ

தேற்றத்தின்பெயர்-கடைப்பிடி-ஓர்ப்பு- குறிக்கோள் - ஆ ௩. பொருளின்மையின்பெயர்— அநத்தம்- (க)] கேளாவென்பதின்பெயர்—வாளா- (க)] கூறியதுகூறலின்பெயர் — புநருத்தம்- (க)

அழைத்தலின்பெயர்—கூவல்-உளைத்தல் - இருத்தல்- கேதல்- வாவெனல்- கரைதல்-ஆகருடணை - விளித்தல் - அகவல்- ஆ கூ. இழறுத்தலின்பெயர்—அறைபோதல்- (க)

சொன்மாலையின்பெயர்—தோற்றம் -சீர்-சுலோகம்-மெய்ப்பு- ஆ ச.] ஏற்றத்தின்பெயர்—கியாதம்-(க)] மேம்பாட்டின்பெயர்—ஊற்றம்-(க)] புகழின்பெயர்—சீர்த்தி-கீர்த்தி-மீக்கூற்று- ஆ ௩.] மிகுபுகழின்பெயர்—சீர்த்தி-கீர்த்தி- ஆ உ.

இகழியாமதிமோவாழிபிகுஞ்சின்முன்னிலையசைச்சொ
லிகழியாவரோபோமாதோடிருந்தோருமேமசைச்சொல்
புகலுங்காலொப்பிலாதபோலுமப்பொருட்டேயாகு
நிகரிலாவொடுவுமோடுநேருமேயுடனிகழ்ச்சி. (௰௬)

அம்மோடாந்தந்நந்நும்மேபல்லால்வான்பாக்குத்தில்லே
யெம்மோமேட்மன்னேபானேயும்பீரொட்டிடைச்சொல்லென்ப
வம்மோடிற்றற்றேயத்தேயல்லில்லன்றனேயையே
தம்றும்மேயவ்வேகுவ்வேசாரியையன்மூன்றென்ப. (௰௭)

கரமொடுகானேகாரங்காட்டியவகரமென்ப
தரமுறவெழுத்துக்கேற்றசாரியைநான்கேசாற்றுங்
கருதிடிலையேயாலேகுவ்வொடின்னதுவேகண்ணே
விரவியவிளியென்றேழும்வேற்றுமையுருபினுமம் (௰௮)

ஏன்னைகொலெவனேபாதேயிவையையக்கிளவிநாற்பே
ருன்னிடிலவ்வேயிவ்வேயுவ்வொடுமூன்றுஞ்சுட்டா
மன்னியயாண்டுமியாங்குமற்றிடத்தையுறச்சொ
லென்னிளிவேயேசிச்சியேளநமிகழ்ச்சியாமே. (௰௯)

உலவியவிஞ்ஞைவித்தையூதியஞ்சாலமோதி
கலையுடனுறுதிகேள்வியிருநான்குங்கல்வியின்பேர்
நலமுறக்கெழுமல்கற்றவைவிலலேபயிலலும்பேர்
பலமுறவோதலின்பேர்பாடமையாடலாமே. (௨௰)

ஆதிநூலெழுதாக்கேள்வியாரணமோத்துச்சாகை
யேதமில்சுருதி[illegible]ன்றேடிருக்கிவையேழும்வேதம்
வேதநூற்பொருளினைமம்விரித்திடுஞானபாகை
யாதியாங்க[illegible]ம்மபாகையருத்தபாகையுமாமென்ப. (௨௧)

மெய்தெ[illegible]பாரணந்தான்வேதத்தின்ஞானபாகை
ண்மயினுட்பொருளினைமற்றுபநிடதமென்ப
வைதிகம்வே[illegible]தமுற்றமார்க்கமேபார்க்குங்காலை
யையமிலிருக்கேடுபௌடிகமாதிவேதம். (௨௨)

முன்னிலையசைச்சொல்லின்பெயர்—இக-மியா-மதி-மோ-வாழி-இரும்-சின்- ஆகூ எ.] அசைச்சொல்லின்பெயர்— இக-மியா-அோ-போ-மாது-இருந்து-ஒரும்-போலும்- ஆகூ அ.] உடனிகழ்ச்சியின்பெயர்—ஒடு-ஒடு- ஆகூ உ.

இடைச்சொல்லின்பெயர்—அம்-ஆம்-தம்- நம்-நும் - எ-அல்-ஆல்- வான்-பாக்கு-தில்-ஏம்-எம்-மன்-யான் - உம்- ஆகூ யசு.
சாரியையின்பெயர் — அம்-இற்று - அற்று - அத்து-அல் - இல்-அன்- ஆன்-ஐ--தம்-நும்-அ-கு- ஆகூ யரு.

எழுத்தின்சாரியையின்பெயர்—கரம் - கான் - காரம் - அகரம்-ஆகூ ச.] வேற்றுமையுருபின்பெயர்—ஐ-ஆல்-கு- இன் - அது-கண்-விளி- ஆகூ எ.

ஐயச்சொல்லின்பெயர்—என்னை-கொல்-எவன்-யாது- ஆகூ ச.
சுட்டின்பெயர்— அ-இ-உ - ஆகூ ரு.] இடத்தையச்சொல்லின் பெயர்—யாண்டு-யாங்கு-ஆகூ உ.]இகழ்ச்சியின்பெயர்—என்-இளி-எயே-சீச்சீ- எளநம்- ஆகூ கூ.

கல்வியின்பெயர்—விஞ்சை-வித்தை - ஊறியம் - சாலம் - ஒதி-கலை-உறுதி-கேள்வி- ஆகூ அ.] கற்றலின்பெயர் — கெழுமல்-நவிலல்-பயிலல்- ஆகூ ரு.]ஓதலின்பெயர்—பாடமையாடல்.(க)

வேதத்தின்பெயர்—ஆதிநூல்-எழுதாக்கேள்வி - ஆரணம்-ஒத்து-சாகை-சுருதி-இருக்கு- ஆகூ எ.] வேதநூற்பொருளின்பெயர்—ஞாநபாகை-கருமபாகை-அருத்தபாகை- ஆகூ ரு.

வேதத்தின்ஞாநபாகையின்பெயர் —ஆரணம்-(க)] வேதத்துப்பொருளின்பெயர்—உபநிடதம்-(க)]வேதமார்க்கத்தின்பெயர்—வைதிகம்-(க)] ஆதிவேதத்தின்பெயர்- இருக்கு- பௌடிகம்- ஆகூ உ.

ஏமமாமிரண்டாம்வேதமெசுறைத்திரியமென்ப
வோமெனுஞ்சாமவேதமுதர்த்தா.நதாத்தமாகித்
தாமரைமலரிருந்துதணப்பிலாக்குணங்கள்கூடி
நாமறவாதிகாலநான்முகன்சொற்றதாமே. (உ௩)

தந்துரைபுனைந்துரைத்தல்சார்ந்தபாயிரத்தினோடு
முந்தியபதிகமேநூன்முகமுகவுரையுமப்பே
ரந்தமாமாகமத்தோடாரிடம்பிடகமற்றுத்
தந்திரம்பனுவலோடுசமயஞ்சூத்திரமுநூற்பேர். (உ௪)

படலமேசருக்கங்காண்டம்பரிச்சேதமத்தியாய
மிடராறுமிலம்பகங்கணூன்முடிபிருமுப்பேரோ
தொடையடிவரையொன்றின்றிச்சூத்திரங்குறித்தயாப்பாம்
படிபுகழ்கின்றநூற்பாவகவலைப்பகருங்காலே. (உ௫)

நேரினமணியையோர்ந்துநிரல்படவைத்திட்டாங்கே
யோரினப்பொருளையாய்ந்திட்டொருவழிவைப்பதோத்தாம்
யாருமோர்நெறியேயன்றியருத்தங்கள்விராய்ச்சிறந்த
பாரியபொதுச்சொற்றேன்படர்வதுபடலமென்ப. (உ௬)

சருக்கத்தின்முடிவின்மற்றுஞ்சாரிலம்பகத்தினீற்றில்
விருத்தமாநடையேயாகும்வேற்றிசைப்பாவினுமம்
விரித்துரையதனினோடுமெய்யுரையுரைப்பொருட்பேர்
பெருத்திடும்பொழிப்பெனுஞ்சொற்பிண்டமாக்கொண்டுகூறு
[ம். (உ௭)

பலத்தினைத்தநவதாயபதிகம்பல்வகைப்பொருட்க
ளிலக்கமேயாக்காணத்தொகுதிசெய்திடுவதாகு
மிலக்கியமெடுத்துக்காட்டலிதிகாசமுதாரணப்பே
ரலக்கண்டர்ஞாபகந்தானரும்பொருள்பிசியுமாமே. (உ௮)

காட்டியயாப்புத்தூக்குக்கவிசெய்யுள்கவிதைபாவே
பாட்டெனப்படும்வெண்பாவிற்படும்பெயர்வெள்ளைமுற்பாச்
சூட்டியவகவலுக்குத்தொகையுமாசிரியமும்பேர்
மூட்டியமுட்கவிப்பாமுடுகியலராகமாமே. (உ௯)

இரண்டாம்வேதத்தின்பெயர்—எசு-தைத்திரியம்-ஆ உ.]சாம வேதமுதாத்தா நுதாத்தமுதலியகீதநடையுளது.

நூன்முகத்தின்பெயர்—தந்துரை-புனைந்துரைத்தல்-பாயிரம்-பதிகம்-முகவுரை- ஆ ரு.] நூலின்பெயர்—ஆகமம்-ஆரிடம்-பிடகம்-தந்திரம்-பனுவல்-சமயம்-சூத்திரம்- ஆ எ.

நூன்முடிபின்பெயர்—படலம்-சருக்கம்-காண்டம்-பரிச்சேதம்- அத்தியாயம்-இலம்பகம்- ஆ சு.]சூத்திரயாப்பின்பெயர்-நூற்பாவகவல். (க)

ஒத்தென்பது—ஒரினப்பொருளையொருவழிவைப்பது. படலமென்பது — ஒருநெறியேயன்றியருத்தங்கள்விராய்ப்பொதுச்சொற்றொடர்வது.

வேற்றிசைப்பாவென்பது — சருக்கமுடிவினுமிலம்பகத்திற்றினும் விருத்தநடையது. உரைப்பொருளின்பெயர் — விரித்துரை-மெய்யுரை - ஆ உ.] பொழிப்பென்பது — பிண்டமாகக்கொண்டுகூறுவது.

பதிகமென்பது — பல்வகைப்பொருட்கள்விளக்கமாகிக்காணத்தொகுதிசெய்வது. உதாரணத்தின்பெயர் — இலக்கியம்-எடுத்துக்காட்டல் - இதிகாசம்-ஆ ஈ.] அரும்பொருளின்பெயர் — ஞாபகம்-பிசி- ஆ உ.

பாட்டின்பெயர்—யாப்பு-தூக்கு- கவி - செய்யுள் - கவிதை - பா- ஆ சு.] வெண்பாவின்பெயர் — வெள்ளை-முற்பா- ஆ உ. அகவலின்பெயர்—தொகை-ஆசிரியம் - ஆ உ.] கலிப்பாவின் பெயர்—முாள்-(க)] ஆாகத்தின்பெயர்—முபிசிய ல்- (க)

குற்றெழுத்துத்தொடர்ந்தசெய்யுளேகுளகமென்ப
விற்றெனவிருபத்தாறேயெழுத்துநான்கடியுமாகி
யுற்றதுசந்தப்பாட்டாமதின்பின்னுவந்தநாமஞ்
சற்றெனுமருங்குனல்லாய்தாண்டகமென்பதாமே. (௬௰)

கற்றறியெழுத்துமெண்ணுங்கணக்கெனச்சொல்லுநாமஞ்
சொற்றிடுங்கரணமோடுசூழ்ந்திடுங்கணிதமெண்ணு
மற்றுறுபெயரெழுத்தின்வடிவுதன்னைமயிலெழுத்தா
மொற்றின்பேர்புள்ளியாய்தமொடுதனிநிலைமெய்ப்புள்ளி. (௬க)

வரியிராகம்பண்கேயமன்விளிகொளையினோடு
பரவுசந்திருவங்கீதம்பாணிகாமரம்பாட்டேயத்
தூரவியபாலையாழேயுலவியகுறிஞ்சியாழே
மருதஞ்செவ்வழியாழென்னவகுத்தநாலிசையுநாற்பண். (௬௨)

நிறைந்திடுமராகத்தோடுநேர்திறமுறுப்புமற்றைக்
குறுங்கலியாசானைந்துங்குறித்தபாலைத்திறங்கள்
பறைந்தநைவளங்காந்தாரம்பஞ்சமமருளயிர்ப்புச்
செறிந்தபஞ்சுரமேயாற்றுச்செந்திறங்குறிஞ்சியென்ப. (௬௩)

தளர்வறுபேரியாழேசகோடயாழ்மருதயாழே
வளையுஞ்செங்கோட்டியாழேமற்றைநால்வகையாழ்ப் பேராங்
களையறுகுரலேதுத்தங்கைக்கிளையுழையினோடே
யிளியொடுவிளரிதாரமென்பவேழிசையினாமம். (௬௪)

குரன்மிடற்றுதுத்தங்கூறுநாக்கிளையேயண்ணஞ்
சிரமுறையிளியேநெற்றிசேர்ந்திடும்விளரிநெஞ்சாந்
தரமுளதாரநாசிதனித்தனிப்பிறக்குமென்னப்
பொருவிலாசிரியமூர்த்திபுலவருக்குரைத்தவாறே. (௬௫)

நான்கொடுநான்குமூன்றுநலம்பெறுமிரண்டினோடு
நான்குமொன்றிரண்டினோடுநல்லமாத்திரைகளாகு
மாங்குள ஆ ஈ ஊ எ ஐ ஒ ஔ வென்னுமேழுந்
தீங்கிலாவகரங்கள்செப்புமேழிசைக்குந்தானே. (௬௬)

துளகமென்பது — குற்றெழுத்துத்தொடர்ந்தசெய்யுள். சந்தப்பாட்டென்பது — இருபத்தாறெழுத்து நான்கடியாகி வருவது. தாண்டகமென்பது — இருபத்தாறெழுத்தின் மிக்குவருவது.

கணக்கின்பெயர்—எழுத்து-எண்-ஆ உ.] எண்ணின்பெயர்—கரணம் - கணிதம்- ஆ உ.] எழுத்தாவன — பெயரெழுத்து-வடிவெழுத்து - தன்மையெழுத்து. ஒற்றின்பெயர்—புளுதம்-ஆய்தம்- தனிநிலை-மெய்-புள்ளி- ஆ ரு.

பாட்டின்பெயர்—வரி- இராகம்-பண்-கேயம்-விளி- கொளை-கந்திருவம்-கீதம்-பாணி- காமரம் - ஆ ௰.] நாற்பண்ணின்பெயர்—பாலையாழ் - குறிஞ்சியாழ் - மருதயாழ் - செவ்வழியாழ்.

பாலையாழ்த்திறங்களின்பெயர்— அராகம்-நேர்திறம்-உறுப்பு-குறுங்கலி - ஆசான் - ஆ ரு.] குறிஞ்சியாழ்த்திறத்தின்பெயர்—நைவளம்-காந்தாரம்-படுமலை-மருள்-அயிர்ப்பு-பஞ்சுரம்-ஆற்றுச்செந்திறம்- ஆ எ.

நால்வகையாழின்பெயர்—பேரியாழ்- சகோடயாழ்-மருதயாழ்- செங்கோட்டியாழ். ஏழிசையின்பெயர் — குரல்-துத்தம்-கைக்கிளை- உழை- இளி-விளரி-தாரம்.

ஏழிசைபிறப்பிடங்களின்பெயர் — குரல்-மிடறு) துத்தம்-நா) கிளை -அண்ணம்) உழை-சிரம்) இளி - நெற்றி) விளரி-நெஞ்சு) தாரம்-நாசி)

ஏழிசைக்குமாத்திரைகளாவன—குரல்- ச. துத்தம்-ச. கிளை -ரு. உழை-உ.இளி-ச.விளரி-ரு. தாரம்- உ. ஏழிசையக்கரங்களின் பெயர்—ஆ- ஈ- ஊ- ஏ- ஐ- ஓ- ஔ.

கால்கிளர்மௌவன்முல்லைகடம்பொடுவஞ்சிநெய்தன்
மேலுளவிளாபுன்னைவிரும்பியமணங்களேழாம்
பாலொடுதேன்கடாமேபகர்தயிர்நெய்யினோடே
யேல்லமேவாழையேதாடிமக்கனியேழ்சுவைக்காம். (௩௭)

வண்டொடுகிள்ளைவாசிமதயானைதவளைதேநு
வொண்டிறலாடென்றேழுமோதுமேழிசையிலோசை
திண்டிறல்விசுவாமித்திரன்யமனங்கிதிங்கள்வெய்யோன்
கண்டசொற்கௌதமன்சீர்க்காசிபனீசராமே. (௩௮)

கருதுமந்தரத்தினோடுகாகுளிமந்தவோசை
மருவியமந்தத்தோடுமத்திமஞ்சமனிசைப்பே
ருரனுந்தாரநீண்டவுச்சமேயல்லிசைப்பேர்
குரலினுக்குரித்தாய்நின்றகூறுமாசான்றிறங்கள். (௩௯)

துறையிரண்டென்பவெள்ளைதோற்றுஞ்செந்துறைகளாகு
நிறைநரம்பதுவேகூடணிகழும்பண்ணாகுமென்ப
குறைநரம்பத்திறங்களென்பதுகூறும்யாழி
னுறையுமின்னிசையெழாலேயோதியநூலின்பண்பாம். (௪௰)

இன்னிசைக்குழலினாமமேற்றவங்கியமேவாரி
கிந்நரம்வீணையின்பேர்கிளத்தியதண்டுமாகு
மன்னியயாழ்ப்பேர்கோடவதியொடுவிபஞ்சியாகு
முன்னியகருவியோடுமொழிந்திடுங்கலமுமப்பேர். (௪௧)

வரும்பிரமாணந்தன்னில்வலிக்கட்டுத்திவவென்றோதுந்
திருப்பியமுறுக்காணிப்பேர்தேரின்மாடகமென்றாமே
நரம்பின்பேர்நாலேகோலேதுபரியேநாடின்முப்பேர்
புரிந்ததந்திரியுமப்பேர்போதன்முன்புகன்றவாறே. (௪௨)

அரவமேகானேயோதையாகுலமாரவாரஞ்
சுருதிகேட்டணைபுலம்புதானியியந்துழனியோசை
யுளாயிலசையிடியேநாதமுழைத்தகோசணையேபாட்டே
யிளாசும்மேவகுணிழுமவ்வழிவைகளேயொலியினாமம். (௪௩)

ஏழிசைமணங்களின்பெயர் — மௌவல்-முல்லை - கடம்பு - வஞ்சி-நெய்தல் -வீரை -புன்னை - எழிசைச்சுவைகளின்பெயர் — பால்-தேன்-தயிர்-நெய் - எலம் - வாழை- தாடிமக்கனி-

எழிசையோசையின்பெயர்—வண்டு-கிள்ளை-வாசி மதயானை-தவளை-தேநு-ஆடு-எழிசையிசரின்பெயர் — விசுவாமித்திரன்-இயமன்-அங்கி-திங்கள் - வெய்யோன்- கௌதமன்-காசியன்-

மந்தவோசையின்பெயர்—மந்தரம் - காகுளி- ஆ உ.] சமனிசையின்பெயர்—மந்தம்-மத்திமம்-ஆ உ ]வல்லிசையின்பெயர்—தாரம்-உச்சம்-ஆ உ.] குாலினுக்குரியபடுமலைப்பாலைமுதலிய திறமேழும்பாலையாழ்த்திறனும்.] துறையிரண்டின்பெயர்—வெள்ளை-செந்துறை-

பண்ணென்னும்பெயர்—நிறைநரம்பிற்று.] திறமென்னும்பெயர்—குறைநரம்பிற்று.] யாழினெழுமின்னிசையின்பெயர்—எழால்-

இன்னிசைக்குழலின்பெயர்—வங்கியம்- (க)] வீணையின்பெயர்—வாரி-கிந்தரம்-தண்டு- ஆ ௩.] யாழின்பெயர் — கோடவி-விபஞ்சி-கருவி-கலம்-                                    ஆ ச.

யாழ்வலிக்கட்டின்பெயர்—திவவு- (க)] முறுக்காணியின்பெயர்—மாடகம்- (க)] நரம்பின்பெயர்—குால் - கோல - துயரி-தந்திரி-                                    ஆ ச.

ஒலியின்பெயர்—ஆவம்-களன்-ஒதை - ஆகுலம் - ஆவாரம்-சுருதி-கோடணை-புலம்பு-தொநி - இயம்-குழனி-ஓசை-உளா-இசை-இடி-நாதம்-கோசணை-பாட்டு-இரை-கும்பை - வகுணி-                                    ஆ உக.

தெளிறலேமுரலன்முக்கல்சிற்றுதல்பயிலல்வேறு
குளிறலேநரலலோடுகுருமித்தனெளிர்தல்சாலப்
பிளிறலேபத்தும்போதப்பிரற்றலுமெடுத்தலோசை
யுளரியப்பாஞ்சிலையொலிப்பேருறுமருமாஞ்சமாமே. (௪௪)

சிரற்றலேதொரித்தலோடுதெழித்தலேகுமிறல்விம்ம
லுரற்றலேயரற்றலவேறுமுரைத்தலேயுளைத்தலேங்க
லிரைத்தலேபிடட்டல்சாலவிடித்தலேயிமிழ்த்தலோடு
குரைத்தலேமுழக்கல்வீசிக்குளிறலேயிசைத்தலோடு. (௪௫)

சிலம்பலேயியம்பலோடுசிதைத்தலேதுவைத்தல்கூடி
யலம்பலேகறங்கலசீறிடமுங்கலேதழங்கலோடு
சிலும்பலேகலித்தல்போதத்தெவிட்டலேகனைத்தலோடே
யுலம்புதல்புலம்பலெண்ணான்கிவையொலித்தலின்பேரொன்ப
(௪௬)

இம்மெனல்கல்லென்றிட்டலிழுமெனல்வல்லென்றிட்டல் [டல்
பொம்மெனலொல்லென்றிட்டல்பொள்ளெனவெனவோலென்றிட்
கொம்மெனல்விடேலென்றிட்டல்குறிப்பொடுமேகொன்றிட்ட
லம்மெனல்சமோலென்றிட்டலநுகரணத்தினோசை (௪௭)

படபடென்றொலித்தல்சாலப்பதபதகளகளென்றன்
மொடுமொடென்றிட்டல்வேறுமொகமொககொளகொளென்ற
திடுதிடென்றிட்டலோடுநெடநெடநெறுநெறென்றல்
கடகடகலகலென்றல்கருதியவுபயவோசை (௪௮)

பூசலேதமரமற்றுப்பொருந்தியகுமுறலார்ப்புக்
கோசணையுலம்பலோடுகோடணைகோலாகாலம்
வீசியகலகம்வேறுமிகவுளறுதறெழித்தல்
பேசுமாகுலமென்றல்லாப்பேரொலியீராறும்பேர் (௪௯)

திமிர்தலேயடித்துவந்ததிமிலமேகளகளங்கள்
குமுதமேபொலிப்பேர்கூப்பிடலலறல்கத்தல்
கம்மயிலாதழைத்தலாகுங்கதறலுமார்தெழித்து
லமைவரவுரப்பல்சீறியதிர்த்திடலதட்டலின்பேர். (௫௰)

முடுத்தலோசையின்பெயர்—தெளிறல்-முரலல்-முக்கல்-சிரற்றுதல்-பயிலல்-குளிறல்-நரலல்-குருமித்தல்-நெளிர்தல்-பிளிறல்-பிரற்றல்-உளை - ஆ ௰௨.] சிலம்பொலியின்பெயர் — மருபுராஞ்சம். (௧)

ஒலித்தலின்பெயர்—சிரற்றல்-தொதித்தல்-தெழித்தல் - குமிறல்-விம்மல்-உரற்றல்-அரற்றல்-உரைத்தல்-உளைத்தல்- எங்கல்-இரைத்தல்-இரட்டல்-இடித்தல்-இமிழ்த்தல்-குரைத்தல்- முழக்கல்-குளிறல்-இசைத்தல்- ஆ ௰அ.

சிலம்பல்-இயம்பல்-சிதைத்தல்-துவைத்தல்-அலம்பல்- கறங்கல்-அழுங்கல்-தழுங்கல்-சிலும்பல்-கலித்தல்- தெவிட்டல்- கனைத்தல்-உலப்புதல்-புலம்பல்- (௰௪) ஆ ௱௨.

அநுகரணவோசையின்பெயர்— இம்மெனல்-கல்லெனல்-இழுமெனல்-வல்லெனல்-பொம்மெனல்-ஒல்லெனல்- பொள்ளெனல்-நெரேலெனல்-கொம்மெனல்-விடேலெனல்-முகேரெனல்-அம்மெனல்-சரேலெனல்- ஆ ௰௱.

உபயவோசையின்பெயர் — படபடெனல்-பதபதெனல்- களகளெனல-மொடுமொடெனல்-மொகமொகெனல்-கொளகொளெனல்-திடுதிடெனல-நெடநெடெனல்-நெறுநெறெனல்-கடகடெனல்-கலகலெனல்- ஆ ௰௧

ஒன்றல்லாப்பேரொலியின்பெயர்—பூசல்- தமரம் - குமுறல்-ஆர்ப்பு-கோசனை-உலம்பல்-கோடணை-கோலாகலம்-கலகம்-கூறுதல்-தெழித்தல்-அருலம்- ஆ ௰௨.

பேரொலியின்பெயர்—திமிர்தல்- திமிலம் - களகளம் - குமுதம்-ஆ ௪.] கமையிலாதழைத்தலின்பெயர்— கூப்பிடல்- அலறல்-கதத்தல்-கதறல்- ஆ ௪.] அதட்டலின்பெயர் — தெழித்தல்-உரப்பல்-அதிர்த்திடல- ஆ ௱.

இறந்ததுநிகழ்வுமற்றையெதிர்வுமாம்புராணஞ்செய்தோ
ணறந்தருகுணபத்திரன்றாளரணெனச்சரணமானேன்
மறந்தலைப்படாத்வீரைமன்னர்மண்டலவன்செய்தான்
சிறந்திடுமொலிபற்றும்பேர்ச்செயுளொன்றையைந்திரட்டி (௫)

பத்தாவதொலிபற்றியபெயர்த்தொகுதி
முற்றிற்றுமுற்றும்.



